**தெளிவுரை:-** காலையில் எழுந்தவுடன் அன்றைக்குச் செய்யவேண்டிய எல்லா கடமைகளை மனதில் தீர்மானித்து, அவைகளை தான் வழிபடும் ஸ்ரீராமரிடத்தில் ஸ்ரீ இராகவேந்திரர் அர்பணிக்கிறுர். அந்த ஸ்ரீ ராமர் எப்படிப் பட்டவர்? ஸ்ரீ வாயு பகவானின் ஸ்ரீ மத்வாச்சாரியாரின் மனதில் வசிப்பவர். ஸ்ரீ வாயு, மத்வர் எப்படிப்பட்டவர்? ப்ரணவம் என்கிற ஓம்காரத்தை வழிப்படுபவர். ப்ரணவம் எப்படிப்பட்டது? உலகத்திலுள்ள எல்லா ஒலிகளின் பொருளாக உள்ளது. அவ்வொலிகள் உலகியல் அல்லது மறையியல் சொற்களாகவோ அல்லது ஒலிகளாகவோ இருக்கலாம். ப்ரணவம் 1) வ்யாஹ்ருதி 2) மாத்ருகா மந்திரங்கள் 3) ஸ்ரீவாஸுதேவ மந்திரம் 4) ஸ்ரீ விஷ்ணு மந்திரம் 5) புருஷ சூக்தம் 6) காயத்ரீ மந்திரம் 7) ரிக்முதலிய வேதங்கள் இவைகளின் அனைத்தின் ஸாரபூதமாக (உட்கிடையாக உள்ளது).

(இங்குக் குறிப்பிட்ட மந்திரங்களின் சிறப்பியல்புகளைத் தனியாக பிற்சேர்க்கையில் சிறப்புக் குறிப்புக்கள் என்கிறப் பகுதியில் தரப்பட்டுள்ளன).

2) பாபாவித்த, தைத்ய பூகாவித்த, ஸ்ரீ விஷ்ணு பக்தயாத்யனந்த குணபரிபூர்ண, ரமா வ்யதிரிக்த பூர்வ ப்ரஸித்த வ்யதிரிக்த அனந்த வேத ப்ரதிபாத்ய முக்யதம, அனந்த ஜீவ நியாமக, அனந்தரூப-பகவத்கார்ய ஸாதக, பரம தயாளு, க்ஷமாஸமுத்ர, பக்த வத்ஸல,

பக்தாபராத ஸஹிஷ்ணு, ஸ்ரீ முக்ய ப்ராண அவதார பூதாநாம்;

**கருத்து:-** முக்ய ப்ராணராகிய வாயு பகவானின் அவதாரமான ஸ்ரீ மத்வர் எப்படிப்பட்டவர்? பாபங்களின் சம்பந்தம் சிறிதும் அற்றவர். அரக்கர்கள் அல்லது

தைத்யகூட்டங்கள் கொஞ்சம் கூட அவரைத் தொட முடியாது. அதாவது அவருக்கு அஸுராவேஶம் என்கிற தீயகுணங்களின் சேர்க்கை துளிக்கூட கிடையாது. ஸ்ரீ விஷ்ணுவிடம் அளப்பரிய பக்தி முதலிய எண்ணற்ற குணநலன்களினால் நிரம்பபட்டவர். வேதங்கள் பரம முக்யவ்ருத்தியினால் ஸ்ரீ ஹரியையே துதிக்கின்றன. பின்பு மஹாலக்ஷ்மீயைத் துதிக்கின்றன. அவ்விருவர்களைத் தவிர்த்து, வேதங்கள் எல்லாம் முக்ய வ்ருத்தியினால் ஸ்ரீ முக்யப்ராணரையே துதிக்கின்றன.

அதாவது, ஹரி, லக்ஷ்மி, இவர்களைத் தவிர்த்து, எல்லா வேத மந்திரங்களின் ப்ரதிபாத்யமானவராக இருப்பவர் ஸ்ரீ முக்யப்ராணர். எண்ணற்ற ஜீவர்களின் நியாமகனாக உள்ளவர் ஸ்ரீ முக்யப்ராணர். நியாமகர் என்றால் கட்டுப்படுத்துப்பவர். எண்ணற்ற உருவங்கள் உடைய இறைவனின் எண்ணற்ற கார்யங்களை முடிக்கவல்லத் திறமையுடையவர் ஸ்ரீ முக்யப்ராணர். மற்றும், அவர் கருணைக் கடல், உயர்ந்த தயாளர், பக்தர்கள் வஶமாவனர், பக்தர்கள் புரியும் குற்றங்களை பொறுத்து அருள்பவர். அந்த முக்யப்ராணரே ஸ்ரீ மத்வராக அவதரித்தவர்.

**குறிப்பு:** இங்கு ஸ்ரீ மத்வரின் பெருமைப் பேசப்படுகிறது. ஸ்ரீ மத்வருக்கும், ஸ்ரீ முக்யப்ராணராகிய வாயுவுக்கும் எந்தவித வித்தியாசமும், பேதமும் கிடையாது. ஒன்று அவதாரமூர்தி; மற்றொன்று மூலமூர்தி

3) அஜ்ஞ-ஜ்ஞானார்தி-ஜ்ஞான யோக்ய-பகவத் க்ருபா-பாத்ர-பூத ஸல்லோக க்ருபாளு, ப்ரஹ்ம-ருத்ராத் - யர்தித பகவதாஜ்ஞாம் ஶிரஸி பரமா தரேண அனர்க்ய ஶிரோ ரத்னவந்நிதாய, ததா அஶேஷ தேவதா ப்ரார்தநாம் ஹாரவத் ஹ்ருதி நிதாய, ஸர்வ ஸ்வகீய ஸஜ்ஜனானுக்ரஹ இச்சயா கர்ம புவி அவதீர்ணானாம்;

**கருத்து**:- இறையறிவு அற்றவராக இருந்து, இறையறிவை அடைய வேண்டும் என்று விருப்பம் உள்ள, இறையறிவுக்குத் தகுதியான ஜீவர்கள் முக்திக்குத் தகுதியுடையவர்கள்; பகவத் பக்தர்கள், ஸஜ்ஜனர்கள். அப்பேர்ப்பட்ட ஜீவர்கள் மேல் கருணை கொண்டவர்கள், பிரம்மா, சிவன் முதலிய தேவர்கள் அவர்கள் அஜ்ஞானத்தில் (இறையறிவு இல்லாமை) உழலும் நல்லோர்களுக்காக ஸ்ரீ விஷ்ணுவைப் பிரார்த்தித்தனர். அப்பொழுது ஸ்ரீ ஹரியானவர் வாயுபகவானைக் கூப்பிட்டு, பூமியில் ஸ்ரீமத்வராக அவதரித்து, நல்லோர்கள் உய்யும் வழியைக் காண்பிக்கவும் என்றுக் கட்டளை இட, அக்கட்டளையை வாயுபகவான் தலையின் மீது மிகவும் மரியாதையோடு கிடைத்தற்கரிய, விலைமதிப்பற்ற ஶிரோரத்னம் என்கிற மணிகிடைத் தாற்போல, ஏற்று, பூமியில் அவதரித்தார். ஹரியைத் தவிர ருத்ரர் முதலிய தேவர்களும் அவரை அவதரிக்கும் படி வற்புறுத்த, அவர்களின் வழிப்பாட்டை மதிப்பற்ற மாலைப்போல், இதயத்தில் ஏற்று, தன்னுடையவரான எல்லா நல்ல ஜீவர்களை அருள்புரியவேண்டும் என்ற எண்ணத்தோடு கர்ம பூமியான இப்பாரத பொன்னாட்டில் ஸ்ரீமத்வர் அவதரித்தார்.

4) **ததா அவதீர்ய ஸகல ஸச்ஶாஸ்த்ர கர்த்ரூணாம், ஸர்வ துர்மத பஞ்ஜகானாம், அனாதித: ஸத்ஸம்ப்ரதாய, பரம்பராப்ராப்த ஸ்ரீ மத்வைஷ்ணவ ஸித்தாந்த ப்ரதிஷ்டாபகானாம், அத ஏவ பகவத் பரமானுக்ரஹ- பாத்ர - பூதானாம்.**

**கருத்துரை** :- அவ்வாறே (வாயுதேவர்) அவதரித்து எல்லா நன்னூல்களையும் (ஸர்வமூல க்ரந்தங்கள் என்கிற ஶாஸ்த்ர க்ரந்தங்கள்) செய்தார். (இயற்றினார்). எல்லா தீயச்சமயங்களின் (துர்மதங்கள்) (கொள்கைகளை) யுக்திகளைக் கண்டித்தார்; முதலற்ற நல்ல ஸம்ப்ரதாய பரம்பரையில் கிடைக்கப்பெற்ற

ஸ்ரீமத் வைஷ்ணவ ஸித்தாந்தம் என்கிற சமயத்தின் கொள்கைகளை நிலைநிறுத்தினார் (ஸ்ரீ ஹரி ஸர்வோத்தம மதத்தை நிலை நிறுத்தினார்) அவ்வாறு நிலை நிறுத்தியதாலேயே இறைவனின் சிறப்பு அருளுக்கு பாத்ரமாகி விளங்குபவர் ஆனார்.

5) **ஸர்வதா பகவதாஜ்ஞயா பகவத் ஸந்நிதௌ பூஜ்யானாம், ததா பகவதா தத்த வராணாம்;**

**கருத்துரை:–** எப்பொழுதும் இறைவனின் கட்டளையின் படி இறைவனின் ஸந்நிதியில் பூஜிக்கப்படுபவர் ஸ்ரீ வாயு தேவ.., அவ்வாறு இறைவனால் கொடுக்கப்பட்ட வரமுள்ளவராய் விளங்குகிறார் ஸ்ரீ வாயுதேவர்.

**குறிப்பு :–** இறைவனின் அருளுக்கு பாத்ரமான ஸ்ரீவாயு வைஷ்ணதேவர் ஸித்தாந்தத்தை நிலைநிறுத்திய காரணத்தால், இறைவன் மற்ற எல்லோருக்கும் கட்டளையிட்டார். அது என்னவெனில், எல்லோரும் இறைவன் ஸந்நிதியில், இறைவனுடன் ஸ்ரீ வாயு தேவரை பூஜிக்க வேண்டும் என்பதுதான்.

6) **த்வாத்ரிம்ஶஸம் லக்ஷணோபேதாநாம், ததா ஸமக்ர குரு லக்ஷணோபேதாநாம், அஸம்ஶயாநாம், ப்ரஸாத மாத்ரேன ஸ்வபக்தாஶேஷ ஸம்ஶயச் சேத்த்ரூணாம்;**

**கருத்துரை:–** வாயு தேவரிடத்தில் 32 நல்ல இலக்கணங்கள் (லக்ஷணங்கள்) நிறைந்து உள்ளன, அதேமாதிரி எல்லா குருவுக்கும் இருக்கவேண்டிய நல்ல லக்ஷணங்கள் உள்ளன, மற்றும் எவ்வித ஸந்தேகங்கள் அற்றவர் வாயுதேவர், தன்னுடைய அருளினால் தன்னுடைய பக்தர்களுடைய எண்ணற்ற ஐயங்களை (ஸந்தேகங்களை) நீக்குபவர் ஸ்ரீவாயு தேவர்.

7) ப்ரணவாத்யஶேஷ வைஷ்ணவ- மந்த்ரோத்தார காணாம், ஸர்வதா ஸர்வவைஷ்ணவ மந்த்ர ஜாபகானாம், ஸம்ஸித்த ஸப்தகோடி மஹா மந்த்ராணாம்,

பகவதி பக்த்யதிஶயேன பகவது பாஸனார்தம் ஸ்வேச்சயா க்ருஹீத ரூபாணாம்;

**கருத்துரை:-** *ப்ரணவம் (ஓம் காரம்) முதலிய பலவாறான விஷ்ணுபரமான மந்திரங்களின் பொருள்களை எடுத்து காட்டியவர் முக்யப்ராணர். எப்பொழுதும் எல்லா வைஷ்ணவ (விஷ்ணு பரமான) மந்திரங்களை ஜபிப்பவர் ஸ்ரீவாயு தேவர். ஏழு கோடி பெரிய மகாமந்திரங்களை ஜபித்து அதன் மூலம் மந்திர ஸித்தியடைந்தவர் ஸ்ரீ அனிலதேவர், இறைவனிடத்திலுள்ள விஶேஷமான பக்தி பரவஶத்தினால், இறைவனை வழிப்படுவதற்காகவே தன்னுடைய முயற்சியினால் பலவித ரூபங்களை தரித்து வழிப்படுபவர் ஸ்ரீ மத்வராயர்.*

8) தத்ர தத்ர ப்ருதக் ப்ருதக் பகவதோ அனந்த ரூபேஷு ப்ருதக் ப்ருதக் வேதோக்த.

ததனுக்த பாரதோக்த,
ததனுக்த ஸம்ப்ரதாயாகத,
ஸ்வேதர ஸ்வாபின்னதயாபி,

அஶேஷ ஶக்தி - விஶேஷாப்யாம்-ப்ருதக்-வ்யவஹார - விஷய- ஸர்வ ஸாமர்த்யோ பேத,

நிரவதிக, அனந்தானவத்ய கல்யாண குணகண பரிபூர்ணானந்த -குணோப ஸம்ஹர்த்ரூணாம்.

**கருத்துரை:-** *(ஸ்ரீ மதானந்த தீர்த்தர் வழிப்பட்டு, ஜபிக்கும் மந்திரங்களின் உட்கிடையான இறைவன் ஹரியின் ரூபங்கள் அனேகமானவை).*

அந்த இறைவனின் ஒவ்வொரு ரூபமும் தனித்தனியே அளவில்லா உருவங்களைக் கொண்டது. அந்த ஒவ்வொரு ரூபமும், வேதங்களில் கூறப்பட்டவையாகும். மற்றும் அதுவுமன்றி, வேதங்களில் கூறப்படாத, மற்றும் ஸ்ரீமன் மஹாபாரதத்தில் கூறப்பட்ட ரூபங்கள் உள்ளவைகள் ஆகும். மற்றும் ஸம்ப்ரதாயத்தின் மூலம் வழி வழியாகவந்த அனேகரூபங்கள் உடைத்தனவாகவும் உள்ளன. ஆனால் இவ்வாறு விவரிக்கப்பட்ட பல இறைவன் ரூபங்கள் அல்லது உருவங்கள் ஒன்றுக்கு ஒன்று வேற்றுமையற்றது. அதாவது, ஒன்றைக் காட்டிலும் ஒன்று வேறானது அல்ல. அவ்வாறு இருந்த பொழுதிலும், விஶேஷம் என்கிற ஒரு தத்துவப் பொருளினால் வெவ்வேறான உருவங்களையுடையதாக நம்முடைய நடைமுறை செயலுக்காக (வியவஹாரத்துக்காக) நமக்கு காணப்படுகின்றன. ஆனால் எல்லா இறைவனின் ரூபங்களும் எண்ணற்ற குணங்களின் சேர்க்கையாகவும், எவ்வித மாசற்றதாகவும் உள்ளன. (ஸகல குண ஸம்பூர்ணன், ஸர்வ தோஷ ரஹிதன்) பகவானின் குணங்கள் கல்யாண (மங்கள) குணங்கள். பகவான் எப்பொழுதும் நிறைந்த ஆனந்த (மகிழ்ச்சி) ஸ்வரூபமாக உள்ளவர்.

**தெளிவுரை** :– ஸ்ரீமதானந்த தீர்த்தர் தம்முடைய தியான காலத்தில் இறைவனுடைய எல்லா ரூபங்களையும், ஒவ்வொரு ரூபத்திலுள்ள அனேக ரூபங்களையும், ஒரே ஸமயத்தில் தியானிக்கும் ஶக்தி உள்ளவர். அதுமட்டுமன்றி, ஒவ்வொரு மூர்த்தியிலும், ஜ்ஞானம், ஆனந்தம் முதலிய பலவிதமான இறைவனின் நற்பண்புளை பகவானின் ஸ்வரூபமாகவே தியானிக்கும் வல்லமைபெற்றவர். (அப்பேர்ப்பட்ட ஸ்ரீமத்வராயரை நாம் நினைப்போமாக)

9) ததா வேதோக்த ஸர்வக்ரியோப ஸம்ஹர்த்ரூணாம், ஏவம் அனந்தரூப அவயவ குண க்ரியா ஜாத்யவஸ்தா விஶிஷ்ட பகவதுபாஸகானாம், பரம தயாளூனாம், க்ஷமாஸமுத்ராணாம், பக்தவத்ஸலானாம், பக்த பராத

**ஸஹிஷ்ணூனாம், ஸ்வபக்தான் துர்மார்காத் உத்தருத்ய, ஸன்மார்க ஸ்தாபகானாம்.**

**கருத்துரை:-** ஸ்ரீ வாயுபகவான் இறைவனுடைய எல்லா குணங்களையும் ஒருங்கிணைந்து வழிப்படுபவர் மட்டும் அல்ல. அவர் அவ்வாறே மறைகளில் கூறப்பட்ட இறைவனுடைய எல்லாசெயல்களையும், ஒரே பொழுதில் ஒருங்கிணைந்து வழிப்படும் ஆற்றல்படைத்தவர். அதுவுமின்றி, அவ்வாறே இறைவனுடைய அளவில்லா உருவங்கள், அவயவங்கள் அல்லது உறுப்புக்கள், குணங்கள், செயல்கள், ஜாதிகள் (அல்லது) பிரிவுகள், அவஸ்தைகள் (அல்லது) நிலைகள், இவைகளின் விஶேஷமான ஒருமைப்பாட்டை நன்கு உணர்ந்து, அவைகளை ஒருங்கிணைந்து (உபஸம்ஹரித்து) வழிப்படும் தகுதியும், ஆற்றலும் உள்ளவர் (வாயுபகவான்). வாயுபகவான் மிகவும் தயையுள்ளவர்; சகிப்புத் தன்மைக் கொண்டவர்; (கடற்போன்ற க்ஷமை உள்ளவர்) பக்தர்களுக்கு மிகவும் பிரியமானவர்; தன்பக்தர்கள் புரிந்த கெட்ட (தீய) வழியிலிருந்து, கடைத்தேற்றி, நல்வழியில் ஈடுபடச் செய்பவர்; மற்றும் நல்வழியைக் காண்பித்து நிலைநிறுத்துபவரும் ஆவார்.

**குறிப்பு:-** இறைவன் என்று ஈண்டுக் குறிக்கப்படுபவர் ஸாக்ஷாத் பரப்ரம்மம் ஹரியே ஆவார். ஹரியினுடைய குணங்களுக்கும், செயல்களுக்கும், உருவங்களுக்கும், உறுப்புக்களுக்கும், அவரின் பல நிலைகளுக்கும், எந்த வித பேதமும், வேற்றுமையும் கிடையவே கிடையாது. இவைகளையெல்லாம் விஶேஷம் என்கிற தத்துவக் கொள்கை மூலமாக பேதமாகத் தெரிந்துக் கொண்டாலும், அவைகள் எல்லாம் ஒன்று என்றே, ஒருங்கிணைந்து வழிப்படுவதே, உபஸம்ஹாரம் எனப்படும்.

10) **ஸ்வபக்தம் மாம் உத்திஶ்ய பகவத: புர:, ''பரம தயாளோ, க்ஷமா ஸமுத்ர பக்தவத்ஸல, பக்த பராத ஸஹிஷ்ணோ, தீனம் தூனம் அனாதம், ஶரணாகதம் ஏனம் உத்தர'' இதி விஜ்ஞாபன கர்த்ரூணாம்;**

**கருத்துரை:-** (அந்த மத்வராயராகிய ஸ்ரீவாயுபகவான்) தன்னுடைய பக்தனாகிய என்னை உத்தேசித்து, இறைவன் முன்பு, ''மிகவும் கருணையுள்ளவரே! பொறுமையின் கடலே ! பக்தர்களின் அன்புக்கு பாத்ரமானவரே ! பக்தர்களின் பிழைகளைப் பொறுத்துக் கொள்வதில் வல்லவரே! ஏழை எளியோன், அநாதை ஆகிய இவனை (பக்தனை) உம்மிடம் தஞ்சம் அடைந்த இவனை தூக்கிவிட்டு காப்பாற்றுவாயாக!'' என்று விண்ணப்பம் (பிரார்த்தனை) செய்துக் கொண்டு இருப்பவர்.

11) **ஸர்வஜ்ஞ ஶிரோமணீனாம், அஶேஷ குர்வந்தர் யாமிணாம், ஸதா பகவத் பராணாம், பகவதோ அன்யத்ர ஸர்வ வஸ்துஷு மனஸ்ஸங்கரஹிதானாம்,**

**கருத்தரை:-** அந்தவாயுபகவான் அனைத்தையும் அறிந்தவர்களில் தலையானவர் (ஸர்வஜ்ஞ ஶிரோமணி); எண்ணற்ற மற்ற குருக்களின் உள்ளிருப்பவர்: எப்பொழுதும் இறைவனிடத்திலேயே மனப்பற்றுள்ளவர், இறைவனைத் தவிர்த்து வேறு எங்கும், மற்றும் எல்லா பொருள்களிலும் மனத்தின் சேர்க்கையை வைக்கா தவராகவும் உள்ளவர் (வாயு பகவான் விஷய ஸங்கங்களில் மனம் (பற்று) இல்லாதவர்).

12) ஸர்வத்ர - ஸர்வதா ஸர்வாகார, ஸர்வாதார,
ஸர்வாஶ்ரய, ஸர்வோத்பாதக, ஸர்வபாலக,
ஸர்வ ஸம்ஹாரக, ஸர்வ நியாமக, ஸர்வப்ரேரக.
ஸர்வ ப்ரவர்தக, ஸர்வநிவர்தக,
யதா யோக்ய ஸர்வ ஜ்ஞான அஜ்ஞான
பந்தமோக்ஷ ப்ரத,
ஸர்வ ஸத்தாப்ரத, ஸர்வஶப்த வாச்ய,
ஸர்வ ஶப்த ப்ரவ்ருத்தி-நிமித்த, ஸர்வகுண அதி
பரிபூரணதம,

ஸர்வ தோஷாதிதூர, ஸர்வாசிந்த்ய, ஸர்வோத்தம, ஸர்வேஶ்வர, ஸர்வாத்யந்த விலக்ஷண,
ஸ்வகத-பேத விவர்ஜிதத்
வாதினா பகவத் த்ரஷ்ட்ரூணாம்;

**கருத்துரை:–** ஸ்ரீ மதாசார்யர் இறைவனை எங்ஙனம் வழிப்பட்டு எப்பொழுதும் எப்படிக் காண்கிறார்? அவரின் இறைவன் எப்பேர்ப்பட்டவர்? ஈண்டு அவைகள் விவரிக்கப்படுகின்றன.

எல்லா இடங்களிலும், எப்பொழுதும் எல்லா வடிவங்களாகவும், எல்லாவற்றிக்கும் ஆதாரமாகவும், எல்லாவற்றையும் ஆஶ்ரயமாகவும் உள்ளவர் ஹரி: மற்றும், ஹரி எல்லாவற்றையும் உற்பத்திச் செய்பவர், எல்லாவற்றையும் காப்பவர், அனைத்தையும் அழிப்பவர், எல்லாவற்றையும் நியமித்து நடத்துபவர், எல்லாவற்றையும் நாசமடைய செய்பவர்; ஒவ்வொருவரின் தகுதிக்குத் தகுந்த மாதிரி (யோக்யதை) எல்லோருக்கும் ஜ்ஞானம் (அறிவு,) அஜ்ஞானம் (அறிவற்றத் தன்மை அல்லது அறியாமை), கட்டுவித்தல், விடுவித்தல் (பந்தம், மோக்ஷம்) தருபவர், எல்லாவற்றின் உள்ளது உள்ளப்படி இருக்கும் தன்மையை (ஸத்தா) வழங்குபவர்; எல்லாச் சொற்களின் உட்கிடையானவர்; எல்லாச் சொற்களின் பொருளின் காரணமாக உள்ளவர், எல்லா தோஷங்களிடமிருந்தும் முற்றிலும் விடுப்பட்டவர், அனைவராலும் நினைப்பதற்கு உரியவர்; எல்லோரைக் காட்டிலும் சிறந்தவர்; எல்லோருக்கும் ஈசனானவர்; அனைத்து பொருட்களைக் காட்டிலும் வேறாக (விலக்ஷணமாக) உள்ளவர்; தன்னிடத்தல் எந்தவிதமான வேற்றுமையும் அறவே அற்றவர்; அப்பேர்ப்பட்ட ஹரியை வாயுதேவர் எப்பொழும் பார்கிறார்.

13) அபிமானாதி ஸர்வதோஷ தூராணாம்; அசூயா ஈர்ஷ்யாத்யஶேஷ மனோதோஷ நிவர்தகானாம்;

**கருத்துரை:-** ஸ்ரீ முக்யப்ராணர் பற்றுதல் முதலிய எல்லா குறைகள் அற்றவர் அதுவுமின்றி, பற்றுதல், பொறாமை, அழுக்காறு முதலிய பலவான மனக்குறைகளை ஒழிப்பவர்.

14) நித்யாபரோக்ஷீக்ருத-ரமாயுக்த-அஶேஷ-பகவத் ரூபாணாம்; அத ஏவ விலீன அஶேஷப்ரக்ருதி பந்தானாம்; அத ஏவ தூரோத்ஸாரித அஶேஷ அநிஷ்டானாம், அத ஏவ பக்தாஶேஷ அனிஷ்ட நிவர்தகானாம்;

**கருத்துரை:-** வாயுதேவர் தம்முடைய அகக்கண்ணினால் (அபரோக்ஷ த்ருஷ்டி) இலக்குமியுடன் கூடிய இறைவனின் பல வித ரூபங்களை காணும் வல்லமை படைத்தவர்; அவ்வாறு சக்தியுள்ளவராகையாலேயே, அனேக ப்ரக்ருதிகளின் கட்டுக்களிலிருந்து விடுப்பட்டவர்; (அதாவது, ப்ரக்ருதி என்கிற ஜட பதார்த்தின் ஸம்பந்தம் அற்றவர்). ஆகையால் (இறையருளால்) அவர் எண்ணற்ற துன்பங்களை தூர ஓடச் செய்பவர்; ஆகையாலேயே பக்தர்களின் எண்ணற்ற துன்பங்கள் - கஷ்டங்கள் இவைகளை விலக்கச் செய்பவர்.

15) ப்ரணவோபாஸகானாம், அஸ்மாதாதி குரூணாம், ஸ்ரீ மதானந்த தீர்த ஸ்ரீ மச்சரணானாம் அந்தர் யாம்ய நிருத்த ப்ரத்யும்ன ஸங்கர்ஷண வாஸு தேவாத்மக;

**கருத்துரை:-** ஓம்காரம் என்கிற ப்ரணவமந்திரத்தை வழிப்படுபவர் நம் ஆதிகுருவாகிய ஸ்ரீமதானந்த தீர்தர் என்கிற மத்வராயராகிய ஸ்ரீ வாயுபகவான். அவருடைய அந்தர்யாமியாக (உள்ளிருப்பவராக) இறைவன் ஹரி விளங்குகிறார். அந்த ஹரி விஷ்ணு - அனிருத்த ப்ரத்யும்ன - ஸங்கர்ஷண வாஸுதேவர் என்கிற நான்கு வ்யூஹ மூர்த்தி உருவங்கள் உடையவராக உள்ளார்.

16) ஸ்ரீ மத்வ வல்லப ஸ்ரீ லக்ஷ்மீ வேதவ்யாஸாத்மக,

**கருத்துரை:–** *(அக்கடவுள் ஹரி) ஸ்ரீமத்வருக்கு தலைவராகவும், இலக்குமியுடன் கூடிய வேதவியாஸ அவதாரமாகவும் உள்ளார்.*

17) அண்ட ஸ்தித அனந்த ரூபாவயவ- குணக்ரியா ஜாத்யாவஸ்தா விஶிஷ்ட ரமாயுக்த க்ஷீராப்தி ஶேஷஶாயி ஸ்ரீ பத்மநாபாத்மக;

**கருத்துரை:–** (அந்த இறைவன் ஹரி) பிரம்மாண்டம் என்கிற பிரபஞ்சத்தின் உள்ளே எண்ணற்ற உருவங்களுடன் இருக்கிறார், ஆனால் இவ்வெவ்வேறு ரூபங்களில் யாதொரு பேதமும் இல்லை. அதுவுமின்றி, இறைவனின் உருவங்கள், உறுப்புகள், நற்பண்புகள், நற்செயல்கள், பிரிவுகள், நிலைகள் இவைகளில் யாதொரு வேற்றுமையும் இல்லவே இல்லை. இப்படி எண்ணற்ற ரூபங்களுடைய ஹரி எப்பொழுதும் எங்கும் லக்ஷ்மீ தேவியின் ஸகிதமாகவே உள்ளார்; மற்றும் பாற்கடலில் அரவின் (பாம்பின்) மேல் பள்ளிக் கொண்டு இருக்கும் தாமரையைக் கொப்புழில் உடையவரான ஸ்ரீ பத்மநாப ரூபியாக உள்ளவர்.

**தெளிவுரை:–** பாற்கடலில் உள்ள இறைவனுக்கும், பிரபஞ்சத்தினுள் உள்ள எல்லோரிடமும் உள்ள இறை உருவங்களுக்கும் எங்கும், எப்பொழுதும். எந்தவித பேதமும் கிடையாது.

18) அண்டாத் ப்ஹி ரபிவ்யக்த ஶுத்த ஸ்ருஷ்டித்வேன அபிமத ஸ்ரீ சதுர்முக- முக்யப்ராணோபாஸ்ய த்வாதி அனேக ப்ரயோஜனக,

அனந்தானந்த ரூப மூலபூத, ததா அஶேஷ ஜகத்பாலன ப்ரயோஜனக ஶாந்திபதி அநிருத் தமூலபூத;

**கருத்துரை:–** (இந்த இறைவன் ஹரியே) பிரம்மாண்டத்துக்கு வெளியே ஏற்பட்ட தூய தோற்றுவிப்பு (சுத்த சிருஷ்டிக்கு) காரணமானவர். பிரம்மாண்டசிருஷ்டிக்கு முன்னால் ஏற்பட்ட பகவத் அவதாரங்களுக்கு - பகவத் தோற்றங்களுக்குச் சுத்த சிருஷ்டி என்று பெயர்.

பிரம்மாண்டதிற்கு வெளியே சுத்தசிருஷ்டியின் மூலம் இறைவன் அநிருத்த, ப்ரத்யும்ன, ஸங்கர்ஷண, வாஸுதேவ என்கிற நான்கு உருவங்களுடன் வெளிவந்தார். இந்த நான்கு அவதார ரூபங்களுக்கும் மூலரூபியான நாராயணனுக்கும் எவ்வித பேதமும் இல்லை) இந்த சுத்த சிருஷ்டி செய்த இறைவனை நான்முகன் என்கிற பிரம்மதேவர், முக்யப்ராணர் முதலியவர்கள் வழிப்படுகிறார்கள். மூலரூபியான நாராயண ரூபியிலிருந்து வெளிவந்த அநிருத்த ரூபம் ஸம்பூர்ணமானது. லக்ஷ்மீதேவி ஶாந்தி என்கிற பெயரில் தோன்றி அநிருந்த தேவரை நன்றாக ஸேவித்தாள். அநிருத்த தேவர் உலகைக்காத்தல் என்கிறத் தொழிலைப்புரிகிறார் (இப்பேர்ப்பட்ட இறைவனை வாயுதேவர் ஸேவிக்கிறார்).

19) ததா அஶேஷ ஜகத் ஸ்ருஷ்டி ப்ரயோஜனக க்ருதிபதி ப்ரத்யும்ன மூலபூத:

**கருத்துரை:–** அவ்வாறே (எண்ணற்ற) உலகங்களை சிருஷ்டிக்கும் நோக்கமுடன் ஹரி ப்ரத்யும்ன ரூபத்தில் தோன்றினார். லக்ஷ்மீதேவி க்ருதி தேவி ரூபத்தில் அவரை ஸேவித்தாள்.

20) ததா அஶேஷ ஜகத் ஸம்ஹார ப்ரயோஜனக ஜயாபதி ஸங்கர்ஷண மூலபூத;

**கருத்துரை:–** அவ்வாறே (எண்ணற்ற) உலகங்களை ஸம்ஹாரம் (நாசம் / அழிவு) செய்யும் நோக்கமுடன் ஹரி ஸங்கர்ஷண ரூபத்தில் தோன்றினார். லக்ஷ்மீதேவி ஜயா என்கிற பெயரில் தோன்றி அவரை ஸேவித்தாள்.

21) ததா ஸ்வஸ்வ-ஸமக்ர - யோக்யதா பிஜ்ஞு - பரமனு க்ரஹஸீல பகவத் ப்ரேரித சதுர்முகாதி ஸத்குரூ பதிஷ்ட;

21-a) ஸ்வஸ்வ யோக்ய பகவத்ரூப குணோபாஸனயா ஸஞ்ஜாத;

21-b) ஸ்வஸ்வ -யோக்ய பகவத்ரூப விஶேஷ தர்ஶன போகப்யாம் விநஷ்ட அனிஷ்ட ஸஞ்சித ப்ராரப்த லக்ஷண அஶேஷகர்மணாம்;

21-c) ஸ்வஸ்வ-யோக்யத-அனுஸாரேண ஸம்பூர்ண ஸாதநாநாம்;

21-d) பூர்வகல்பேப்ரஹ்மணா-ஸஹவிரஜா நதீ ஸ்நானேன த்யக்த லிங்கானாம்.

21-e) ததா விநஷ்ட அவஶிஷ்ட இஷ்ட அஶேஷ ப்ராரப்த கர்மாணாம்;

21-f) ப்ரளயகாலே பகவதுதரே வஸதாம்;

21-g) ஆனந்த மாத்ர வபுஷாம், ததனுபவ - ரஹிதாநாம்.

21-h) ஸ்வஸ்வ யோக்ய பகவத் ரூப விஶேஷ-த்யான-ரதானாம்;

21-i) ஸ்ருஷ்டி காலே பகவதுதராத் பஹிர் ஆகதானாம்;

21-j) ஸ்ரீ ஶ்வேத த்வீப தர்ஶனம் நிமித்தீக்ருத்ய - ப்ரதான-ஆவரண - பூத-ஸ்வேச்சாபஸரணேன - ஸ்வஸ்வ-யோக்ய - ஆனந்தாவிர்பாவ லக்ஷண - முக்தி ப்ரதான ப்ரயோஜனக மாயாபதி ஸ்ரீ வாஸுதேவாத்மக;

22) லக்ஷ்ம்யாத்மக ப்ரளயாப்திஸ்த ஸ்ரீ வடபத்ரஶாயி;

**கருத்துரை:–** (முன்னால், அனிருத்த, ப்ரத்யும்ன, ஸங்கர்ஷண பகவன் மூர்த்தங்களையும் அவர்கள் செய்யும் காத்தல், தோற்றுவித்தல், அழித்தல் செயல்களையும் கூறப்பட்டன. இப்பொழுது முக்தி அல்லது வீடுப்பேற்றைத்தரும் வாஸுதேவரின் மகிமை கூறப்படுகிறது.)

ஜீவர்கள் என்கிற உயிருள்ள சேதன வஸ்துகள் ஒவ்வொன்றின் உண்மைநிலையை (அதாவது, உள் தகுதியை) (யோக்யதை-ஜீவ ஸ்வரூப யோக்யதை) நன்றாகத் தெரிந்து, ஜீவர்களின் மேல் அன்புக்கொண்டு அருள் புரியும் ஸ்வபாவம் (உள் நிலை) உள்ளவரும், இறைவனால் ஆணையிடப்பட்டவராகவுமுள்ள, நான்முகபிரம்மன் முதலிய நல்லாசான்கள் (ஸத்குரு) மூலம் தன்னுடைய (தங்களுடைய) தகுதிக்குத் தேர்ந்த குணங்களினால் (பண்புகளால்) இறைவனை வழிப்படும் நல்லுபதேசத்தை (நல் உயிர்கள்) (ஸஜ்ஜீவராஶிகள்) அடைகின்றனர். (பெறுகின்றனர்) மற்றும், ஸஜ்ஜீவர்கள் (நல்லுயிர்கள்) தங்களுடையத் தகுதிகளுக்குத் தகுந்தாற் போல், தங்கள் ஆசான்களால் உபதேசிக்கப்பட்ட இறைவனின் ரூபங்களை ''பண்புகளின் சேர்கை'' என்கிறமுறையில் (குண உபஸம்ஹாரம்) தியானிக்கிறார்கள் (வழிப்படுகிறார்கள்) அந்த த்யானங்களின் மூலம் ஸித்திக்கப்பட்ட அல்லது அடையப்பட்ட தங்களுடையத் தகுதிகளுக்கு ஏற்ற இறைவனின் (தனிப்பட்ட) ரூபங்களின் தோற்றங்களை உட்கண்களால் காண்கின்றனர். (ஸ்வபிம்ப தர்ஶனம் அல்லது அபரோக்ஷ தர்ஶனம்).

நேரடிப்பார்த்தல் (அபரோக்ஷ தர்ஶனம்) மூலம் ஜீவர்கள் தங்களுடைய ஸஞ்சித கர்மங்களின் (சம்பாதிக்கப் பட்ட அல்லது அடையப்பட்ட வினைகளின்) ''அநிஷ்ட கர்ம பிரிவுகளின்'' நாசத்தை அடைந்தவராக ஆகிறார்கள் அவ்வாறே அவர்கள் ஏற்கனவே ஆரம்பிக்கப்பட்ட (ப்ராரப்த கர்மங்கள்) வினைகளை அனுபவித்தல் (போகித்தல்) மூலமாக கழித்துக் கொள்கிறார்கள்.

**குறிப்பு**:– கர்ம வினை மூவகைப்படும் ஸஞ்சிதம், ப்ராரப்தம், ஆகாமி என்று அவைகளுக்குப் பெயர். ஏற்கனவே அடைந்த கர்ம வினைகளின் பயனின் தொகுப்பே ஸஞ்சிதமாகும். அவற்றில் ஒரு சிறுப்பகுதி ஜீவனின் இப்பொழுதைய பிறப்பில் பயன்தர ஆரம்பித்துள்ளது. இதற்கு ப்ராரப்தம் என்றுப்பெயர். இன்னும் நிறைய ஸஞ்சித கர்ம பலன்கள் பயன் தராமலே உள்ளன. அவைகள் பல ஜன்மங்களில் பலன் தரும்.

இந்தப்பிறவியில் செய்யும் வினைகளின் பலன்களை முந்தையப் பிறவிகளில் அனுபவிக்கவேண்டும். அக்கர்மவினைப் பலன்களுக்கு ஆகாமி என்றுப்பெயர். வினைகளின் பலன்களை ஜீவர்களால் அனுபவிக்காமல் விட முடியாது. ஆனால் இறையருளால் அபரோக்ஷ தர்சனம் கிடைத்தவுடன், ஸஞ்சிதம், ஆகாமி கர்ம வினைப்பலன்கள் நாசமடைந்துவிடும். ஸஞ்சிதம் முழுவதும் நாசமடைந்து விடும் ஆகாமியின் பலன் வரவேவராது. ஸஞ்சித கன்மத்தின் உட்பிரிவான அனிஷ்ட புண்ய- பாபங்கள் நாசமடைகின்றன. இஷ்டபுண்யங்களை நல்லோர்கள்-தங்கள் பக்தர்களுக்கு வழங்குவதன் மூலம் நாசம் அடையச் செய்கின்றனர், அபரோக்ஷஜ்ஞானிகள். ஆனால் அப்பிறவியில் ஆரம்பிக்கப் பட்ட ப்ராரப்த கர்ம வினைப் பயனைமட்டும் ஜீவன் அனுப்பவித்தே ஆகவேண்டும். அதை அனுபவித்த பின்பே வீடுப்பேற்றை (முக்தி) அடையமுடியும்.

இவ்வாறு நேரடிகாணல் (அபரோக்ஷ தர்சனம்) மூலம் ஜ்ஞானியான ஜீவர்கள், ஸஞ்சிதபாபங்களையும், ஸஞ்சித அநிஷ்ட புண்யங்களையும் நாசம் அடைந்தவைகளாக உள்ளவர்களாகி, போகத்தினால் ப்ராரப்த கர்ம வினைகளையும், அழித்தவர்களாகி, தங்களுடையத் தகுதிக்குத் தகுந்தச் செயல்களைப் புரிந்து (யோக்யதாஸாதனம்) சதுர்முக பிரம்மனுடன் (நான்முகக் கடவுள்) முந்தைய கல்பத்தில், விரஜா நதியில் ஸ்நானம் செய்தவர்களாகி இருக்கிறார்கள். அவ்வாறு விரஜாநதியில் ஸ்நானம் செய்தபொழுது தங்களுடைய லிங்கதேகத்தை அழித்துக் கொண்டவர்

ளாகிறார்கள் அவர்கள் தங்களுடைய ஸஞ்சித இஷ்ட கர்ம (காம்ய) புண்யங்களை தன்பக்தர்களுக்கு வழங்கி விடுகிறார்கள். ப்ராரப்தத்தை அனுபவித்துத்தீர்த்து விடுகிறார்கள். இல்லையென்றால் இறையருளால் குறைத்துத் தீர்த்து விடுகிறார்கள். (உப மர்தனம்) பின்பு ப்ரளயகாலம் வரும் வரையில் நான்முகனுடன் அவன் உலகில் இருக்கிறார்கள். பின்பு ப்ரளயம் வந்தவுடன் நான் முகனுடன் விரஜா நதியில் ஸ்நானம் செய்துத் தங்களுடைய லிங்கத் தேகத்தை அழித்துக் கொள்கின்றனர். பின்பு அந்த ஜீவர்கள் எல்லோரும் பிரளய காலத்தில் இறைவனுடைய வயிற்றிலேயே வாசம் புரிகிறார்கள், எவ்வித அசைவுகளும் அன்றிதிராணியற்றவர்களாகி இறைவன் வயிற்றில் தூங்குகிறார்கள்.

(குறிப்பு: இட நெருக்கடிக் காரணமாக இங்குக் கூறிய பல விஷயங்களை விரிவாக எழுதமுடியவில்லை).

மஹாப்ரளய காலத்தில் பகவானின் வயிற்றில் லிங்கதேகம் நாசம் அடைந்த முக்தியோக்ய ஜீவர்கள், தூங்குகிற நிலைப்போன்ற, ஒருநிலையில் தங்களுடைய பிம்பரூபி பரமாத்மாவைத் தியானித்துக் கொண்டு இருக்கிறார்கள். இவ்வாறு முக்தியடைந்த ஜீவர்கள் மஹாப்ரளய காலத்தில் தங்களின் ஸ்வரூப ஸுகத்தை (உள்ளின்பம்) முழுமையாக அனுபவிப்பதில்லை. ப்ரளயம் காலம் முடிந்து ஸ்ருஷ்டி காலம் வரும் பொழுது அவர்கள் இறைவனின் வயிற்றிலிருந்து வெளிவருகிறார்கள் அப்பொழுது இறைவன் வாஸுதேவ ரூபமாகி அவர்களை வைகுண்டத்திற்கு அழைத்துச்செல்கிறார். அப்பொழுது இலக்குமி தேவி 'மாயா' என்கிற பேர்உடையவளாகி இறைவனைச் சேவிக்கிறார். (வைகுண்டம் மூன்று நிலைகளையுடையது. அவைகள் ஸ்வேதத்வீபம் (வெண் தீவு), அனந்தாஸனம் (எண்ணில்லா இருக்கை), வைகுண்டம் என்று முறையே ஆகும்.) வாஸுதேவமூர்த்தி முக்தர்களை (வீடுப்பேற்றையடைந்தவர்களை) முதலில் சுவேத த்வீபத்துக்கு அழைத்துக் கொண்டுப் போய், அங்கு ஹரியின் மூலரூபமான நாராயண ரூபத்தைக்காண்பிக்கிறார்.

**குறிப்பு**:- இங்குக் கூறப்பட்ட வாஸுதேவ, ஹரி, நாராயண, பத்ம நாப மூர்த்தி ரூபங்களுக்கு எந்தவித பேதமும் இல்லவே இல்லை. சில நிமித்தங்கள் காரணமாக வெவ்வேறு உருவங்கள் உள்ளவர்களாகி உள்ளார். விஶேஷம் என்கிற ஒரு தத்துவத்தின் மூலம் பேதமில்லா இவ்வுருவங்களில் பேதத்தோற்றத்தைக் காண்கிறோம்). நாராயண ரூபத்தைக் கண்டவுடன். ஜீவர்கள்மேல் கருணைக் கொண்டு, நாராயணன் தன்னுடைய இச்சை என்கிறப் போர்வையை ஜீவர்கள் மேலிடமிருந்து விலக்குகிறார். அப்படி விலக்கியவுடன், ஜீவர்களின் ''ஸ்வரூப ஆனந்தம்'' நன்றாக வெளிப்படுகிறது. முக்தர்கள் ''ஸ்வரூபஸுகத்தை'' நன்றாக அனுபவிக்கிறார்கள் அதற்குப் பின்பு. ஆகையால் முக்தர்களுக்கு முக்திக் கொடுக்கும் காரியத்தை மாயாபதி வாஸுதேவ மூர்த்திச் செய்கிறார்.

**குறிப்பு**:- ஜீவர்கள் முக்தியோக்ய ஜீவர்கள் - ஆனந்த ஸ்வ ரூபமானவர்கள். அநாதி நித்யமாக ஆனந்த ஸ்வரூபமாக உள்ளவர்கள். ஆனால் ஸம்ஸார நிலையில் அவை வெளிப்படுவதில்லை. ஏன் என்றால், ஜீவனின் ஸ்வரூப தேகத்தின் மேல் அநாதியாக பல போர்வைகள் போர்த்தப்பட்டுள்ளன. அவைகள் (போர்வைகள்) தூக்கிஎறிந்தப் பின்புத் தான் உட்சுகம் வெளிப்படும். அந்த போர்வைகள் ஸாதனை மூலமாகவும், இறையருளாலும், மட்டுமே தூக்கி எறியப்படத்தகுந்தவைகளாகும் முக்கியமாக, ஜீவச்சாதிகா, பரமாச்சாதிக என்கிற அஜ்ஞான படுதாக்கள், ஹரி இச்சை என்கிறபோர்வை உள்ளன. மரணத்தின் மூலமாக ஸ்தூல தேகம் நாசமடைகின்றது. அபரோக்ஷ தர்சனத்தின் மூலம் ஜீவச்சாதிகா, பரமாச்சாதிகா என்கிற பாவரூப அஜ்ஞானப் படுதாக்கள் (தன் பற்றிய அறியாமை, இறைவனைப் பற்றிய அறியாமை) நாசமாகின்றன. ப்ரளய ஆரம்பத்தில் விரஜாநதி ஸ்நானம் மூலம் பிரக்ருதி ஸம்பந்தமான அநிருத்ததேகம், லிங்கதேகம் நாசம் அடைகிறது. அதன் பின்பு ஜீவன் அப்ராக்ருத தேகத்தவனாக ஆகிறான். பின்பு ஶ்வேத த்வீபத்தில் மூலரூபிநாராயணன் தர்சனம் வாஸுதேவ ரூபியால், சிருஷ்டிக்கால ஆரம்பத்தில்

செய்விக்கப்படுகிறது. அப்பொழுது இறைவன் தன் இச்சை என்கிற போர்வையை ஜீவன் மேலிடமிருந்து விலக்குகிறான். அப்பொழுதுதான் ஜீவன் ஸம்பூர்ணமாக தன் ஸ்வரூபத்தை அனுபவிக்கிறான். அதற்கு பின்பு ஜீவன் அனந்த நித்யமாக, ஶஶ்வதேக பிரகாரமாக ஸ்வரூப ஆனந்தத்தை, ஸ்வரூப தேஹத்தின் மூலம் அனுபவித்துக் கொண்டே இருக்கிறான்.)

(மறுபடியும் ப்ரளய காலத்திலுள்ள இறைவனை, அவன் மகிமையையும், ராயர் வர்ணிக்கிறார்.)

ப்ரளயகாலத்தில் உள்ள நீர் ப்ராகிருத நீர் அல்ல (இயற்கை நீர் அல்ல) அது லக்ஷ்மீ தேவியின் ஸ்வரூபமே. அதாவது, லக்ஷ்மீதேவியே ப்ரளய நீராக மாறியுள்ளாள். அப்பொழுது அந்த நீரீலேயே லக்ஷ்மீதேவி இன்னொரு உருவத்தில் ஆலமர இலையாகி மாறியிருந்தாள் (வடபத்ரம்). அவ்வால இலையின் மேல் இறைவன் ஒருகுழந்தை உருவில் படுத்துக்கொண்டு, யோகநித்திரையில் ஆழ்ந்து இருந்தார். வடபத்ரஶாயியே, ஶேஷஶாயியான ஹரியாவார்.

23) அஶேஷ - ஜகதுதர
அஶேஷ முக்த நாபி தேஶோர்த்வபாக -
குக்ஷ்யாக்ய தேஶ த்ரிவித,
அஶேஷ - ஸம்ஸாரி நாபிதேஶ
அஶேஷ தம: பதித நாப்ய தோ பாக-தேஶ;

**கருத்துரை:–** அந்தப்ரளய ஜலத்தில் ஹரி தன் வயிற்றில் மீதியற்ற (எண்ணற்ற) சேதன அசேதன வஸ்துக்கள் கூடிய உலகத்தை (பிரபஞ்சத்தை) வைத்துள்ளார். (தரித்துள்ளார்) அப்பொழுது எண்ணற்ற ஏற்கனவே முக்தியடைந்த ஜீவர்களும், முக்தி உலகங்களும், இறைவன் வயிற்றின் மேல் பாகத்திலுள்ள குக்ஷி என்கிறப்பகுதியில் (தேஶம்) உள்ளவைகளாகி இருக்கின்றன. தொப்புளின் மேல்பாகமாக உள்ள முக்தியோக்ய ஜீவர்கள், (அதாவது இன்றும் முக்தியடையாமல் ஆனால் முத்திக்குத் தகுதியான உள்ள ஜீவர்கள்,) நித்யஸம்ஸார ஜீவராஶிகள்,

தமஸ்ஸையடையாத ஆனால் தமஸூக்கு யோக்யமாக உள்ள, தாமஸ ஜீவர்கள், என்கிற மூவித ஜீவர்கள் (இவர்களும் எண்ணற்றவர்கள்) இறைவனின் நாபிப்பகுதியாகிய தொப்பூழ் பகுதியில் உள்ளனர். அதாவது அங்கு வசிக்கின்றனர் ப்ரளயகாலத்தில் தொப்பூழ்பகுதிக்கு நாபிக்கு கீழ் உள்ள வயிற்றுப்பகுதியில் ஏற்கனவே அந்தம் தமஸ் அடைந்த தமோ யோக்ய ஜீவர்கள் வசிக்கிறார்கள்.

(ப்ரளயத்தின் போது லக்ஷ்மீயும், பரமாத்மாவும்மட்டும் உள்ளனர். எல்லா சேதன - அசேதன மயமான உலகங்கள் எல்லாம் இறைவன் வயிற்றில் அசைவற்று, ஓர் ஆழ்ந்தத் தூக்க நிலையில் உள்ளன. அப்பொழுது நித்யமுக்தியோக்ய ப்ராரப்த முக்தி ஜீவர்கள் வயிற்றின் மேல்பாகத்திலும், நித்ய தமோயோக்ய ப்ராரப்த தமோ ஜீவர்கள் வயிற்றின் அடிப்பாகத்திலும், மற்ற த்ரிவித ஜீவராசிகள்-அப்ராரப்த முக்தர்கள்-வயிற்றின் நடுப்பாகத்திலும், வாசம் புரிகிறார்கள்.)

24) ஸ்ரீ பூம்யாலிங்கித, காலாதி-சேஷ்டக, பரமாண்வா-த்யஶேஷ காலா வயவ- ஸ்ருஷ்டியாதி கர்த்ரு ஶேஷநாமக; பரம புருஷ நாமக, ஸ்ரீசதுர்முக-முக்ய ப்ராணோ பாஸித-சரண, அநிருத்தாதி சதூரூபாத்மக

**கருத்துரை**:– வடபத்ர ஶயனனாத பாலக்ருஷ்ண ரூபி ஹரியை ஸ்ரீதேவி, பூதேவி என்கிற இலக்குமியின் ரூபங்களான தேவியர் அணைத்துக்கொண்டு இருக்கின்றனர். (ஆலிங்கனம் செய்கின்றனர்) இந்த ஹரியே காலத்தின் நியாமகன், காலத்தை நடத்துபவன், பரமாணு முதலாகிய காலத்தின் வெகு நுட்பமான (ஸூக்ஷ்மமான) பாகங்களையும் செய்பவன், ஶேஷன் என்கிற பெயருடையவன், மிகச்சிறந்த புருஷன் (பரமபுருஷன்) என்கிற பெயருடையவன் லக்ஷ்மீ, நான்முகன், முக்யப்ராணர் முதலியவர்கள் வணங்குகிற பாதத்தை யுடையவன்; மற்றும் அநிருத்தன், ப்ரத்யும்னன்,

ஸங்கர்ஷணன், வாஸுதேவன் என்கிற நான்கு ரூபங்களை யுடையவன், (காலத்தின் மிக நுண்ணியப் பகுதியே பரமாணு ஆகும். (Pico-Pico second) ஶாஸ்த்ரப்ரகாரம் கால நிர்ணயம் இவ்வாறு உள்ளது.

*(2 பரமாணு = 1 த்வ்ய்யணுக; 3 த்வ்ய்யணுக = 1 த்ர்ய்யணுக; 3 த்ர்ய்யணுக = 1த்ருடி; 3த்ருடி = 1 வேத; 3பேத = 1லவ 3 லவ = 1நிமிஷ; 3 நிமேஷ =1 க்ஷண; 5 க்ஷண = 1காஷ்ட; 15 காஷ்ட = 1லகு; 15 லகு = 1 நாடிகா அல்லது 1 களிகெ (கடிகா) 2 கடிகா = 1 முஹுர்த; 3முஹுர்த = 1 ப்ரஹர (6 களிகெ)7 to 8 களிகை =1 யாம; 8 யாம = 1 அஹோ ராத்ரி; (1 தின) 15 தின = 1 பக்ஷ; 2 பக்ஷ = 1 மாஸ; 2 மாஸ = 1ரிது 6மாஸ = 1 அயன; 2அயன = 1 ஸம்வத்ஸர (வர்ஷ) 1வர்ஷ = 1 தேவதின; 360 தேவதின = 1 தேவ வர்ஷ )*

*(4000 தேவவர்ஷம் = 1 க்ருதயுகம்*
*3000 தேவவர்ஷம் = 1 த்ரேதாயுகம்*
*2000 தேவவர்ஷம் = 1 துவாபரயுகம்*
*1000 தேவவர்ஷம் = 1 கலியுகம்*
*2000 தேவவர்ஷம் = 1 யுகஸந்தி - மொத்தம்*
*12000 தேவவர்ஷங்கள் = 1 மஹாயுகம்)*

அதாவது

*43,20,000 மனிதவருடங்கள் = 1 மஹாயுகம்*
*71 மஹாயுகங்கள் = 1 மன்வந்தரம்*
*14 மன்வந்தரங்கள் = 1 கல்பம்*
*1 கல்பம் = பிரம்மதேவனின்ஒருதினம்*
*360 பிரம்ம தினங்கள் = பிரம்மனின் ஒரு வருடம்*
*100 ப்ரம்ம வருடங்கள் = பிரம்மனின் ஸம்பூர்ண ஆயசு = 1 பரம் (பர என்பது 100 ப்ரம்மவருடங்கள்).*

25) காயத்ரீ நாமக, ஸவித்ருநாமக, ரூப விஶேஷாத்மக;

**கருத்துரை:**– ஹரியானவர், காயத்ரீ, ஸவிதா முதலிய பெயர்களுடன், ரூபங்களுடன், கூடிய விஶேஷமானவர்.

26) வ்யாப்த ரூப-ப்ருஹத்-ஶரீர, சூன்யாபித, காலா பித, கேவலாபித, ப்ரஹ்மாபித அனந்தாபித, ரூப விஶேஷாத்மக;

**கருத்துரை:**– ஹரியானவர் எங்கும் பரவியிருப்பவர்; பெரிய ஶரீரதத்தையுடையவர் ''சூன்யம்'' என்கிற பெயருடையவர்; காலம் என்கிறப் பெயர் உடையவர், கேவலம் என்கிறப்பெயர் உடையவர்; ப்ரஹ்மன், அனந்தன் முதலிய பெயர்கள் உடையவர்; அதுவுமின்றி, இப்பேருள்ள விஶேஷங்களைத் தரித்தவராக உள்ளவர்.

27) நிருப சரித - மூலரூப, நிருப சரித -வ்யாப்த ப்ரதிபாத்ய, அனந்த தேஜ: புஞ்ஜ-தாத்ரூஶ ரமாயுக்த ரூப விஶேஷாத்மக:

**கருத்துரை:**– உவமையற்ற ஒப்பில்லா நடத்தையுடையவன் ஹரி, மூல ரூபிஹரிக்கும் மற்ற ரூபங்களுக்கும் வேற்றுமை (பேதம்) இல்லை. எல்லா ரூபங்களும், ஒப்பில்லாதவை; எங்கும் பரவியுள்ளவை; அனைத்தின் ப்ரதிபாத்யமாக உள்ளவை; முடிவற்ற ஒளிக்கற்றையின் பிரகாசம் உள்ளவை; ரமாதேவியுடன் கூடிய ரூப முள்ளவை; விஶேஷமானவை;

28) காயத்ரீ, பூத, வாக், ப்ருதிவீ, ஶரீர, ஹ்ரூதய, பேதேன, ஷட்வித காயத்ரீ நாமக;

**கருத்துரை:**– காயத்ரீ, பூதம், வாக்கு, ப்ருத்வி, ஶரீரம், ஹ்ருதயம் என்கிற ஆறுவித காயத்ரீ நாமங்களில் அவைகளின் ப்ரதி பாத்யமாக ஹரி உள்ளான்

*(சாந்தோக்ய உபநிஷத்தில் விஷ்ணுவானவர் காயத்ரீ என்கிற பெயரில், காயத்ரீ என்கிற ஸ்த்ரீருபத்தில் இருக்கிறார் என்றுக் கூறப்பட்டுள்ளது. அவர் ஆறு ப்ரபேதங்களுடன், ஆறு இடங்களில் வியாபித்து இருக்கிறார் என்று உபநிஷதம் கூறுகிறது)*

29) லோக, வேத, ஸமீர, ரமாந்தர்கத ப்ரணவாக்ய - துரீய பாதோபேத காய்த்ரீ - பாத சதுஷ்டய ப்ரதிபாத்ய வைகுண்ட ஸ்தித அனந்தாஸனஸ்தித - ஶ்வேத த்வீபஸ்தித - ஸர்வ ஜீவஸ்தித -ரூப வேதேன சதூரூபாத்மக;

**கருத்துரை:–** *ஸ்ரீ ஹரி லோக, வேத, ஸமீர, ரமா, இவர்களின் அந்தர்கதனாக (உள்ளிருப்பவராக) இருக்கிறார். (லோகாபிமானி, வேதாபிமானி, வாயு தேவர், லக்ஷ்மீதேவி இவர்களின்) (அந்தர்யாமியாக உள்ளார்) (ஸர்வந்தர் யாமி ஹரிதான்) ஓம்காரமாகிய ப்ரணவத்துடன் கூடிய நான்கு பாதங்களுடன் (பாகங்கள்) கூடிய காயத்ரீ மந்திரத்தின் ப்ரதி பாத்யராகி உள்ளவர் ஹரி: வைகுண்டம், அனந்தாஸனம், ஶ்வேத த்வீபம் முதலிய 3 உலகங்களில் ஹரி, வைகுண்டர், வாஸுதேவ - நாராயணர் என்கிற 3 ரூபங்களில் உள்ளார்; மற்றும் எல்லா ஜீவர்களிடமும் அந்தர்யாமியாக உள்ளார் (புருஷ நாமக ரூபம்) ஆக நான்கு ரூபங்கள் என்கிற ப்ரபேதத்துடன் இருக்கிறார்.*

*(4 ரூபங்கள் வைகுண்டர், வாஸுதேவர், நாராயணர், புருஷநாமகர்)*

30) தேஹவ்யாப்த தேஹாந்தர்யாமி, ஜீவவ்யாப்த ஜீவாந்தர்யாமி, ரூபபேதேன சதூரூபாத்மக;

**கருத்துரை:–** ஜீவர்களின் ஸ்தூல தேஹங்களில் பரவிய வராகி உள்ளார் ஹரி, ஜீவர்களின் தேஹங்களின் அந்தர்யாமியாக உள்ளவர் ஹரி; எல்லா ஜீவர்களின் சூக்ஷ்ம தேஹங்களில் (லிங்க, ஸ்வரூப தேஹங்கள்) பரவியவராகி உள்ளார், எல்லா ஜீவர்களின் அந்தர்யாமியாக உள்ளார். இவ்வாறு நான்கு வித வேற்றுமைகளுடன் கூடிய ரூபங்களை உடையவராகி உள்ளார் ஹரி. (விஶ்வ, தைஸஜ, ப்ராஜ்ஞ, துரீய முதலிய நான்கு ரூபங்களுடன் ஹரி எல்லோரிடமும் உள்ளார் என்பது ஒரு ஶாஸ்த்ர ப்ரமேயம்.)

31) நிருப சரித ஸர்வ வாகர்த - ப்ரதிபாதக, ஸ்ரீ தேவ்யாதி ரமா ரூபாஷ்டக - அபிமன்யமான, சக்ர ஶங்க வராபய யுக்த, ஹஸ்த சதுஷ்டயோபேத, ப்ரதீபவர்ண, ஸர்வாபரண பூஷித, விஶ்வாதி பகவத் ரூபாஷ்டக, ப்ரதிபாதக, அகாராதி அஷ்டாக்ஷராத்மக;

**கருத்துரை:–** எல்லா வாக் என்கிற இந்திரியத்தில் 'வாக்' என்கிறப் பெயர் உடையவளாகி உள்ள ஸ்ரீதேவி, பரம முக்ய வ்ருத்தியினால், 'ஸர்வ வாக்' ஹரியிடமே உள்ளது என்பதால், ஸ்ரீ ஹரியைப் பிரதி பாதிக்கிறாள் (ப்ரதிபாத்யளாகி உள்ளாள்) அகரம் முதற்கொண்டு எட்டு பாகங்கள் உடைய ப்ரணவ மந்திரத்தின் ப்ரதிபாத்யாமாக உள்ள ஸ்ரீஹரியின் எட்டு ரூபங்களை, ரமாதேவி தன்னுடைய எட்டு ரூபங்களினால் ஸேவிக்கிறாள்.

இந்த பகவானின் எட்டு ரூபங்களும், சக்ரம், சங்கம், வரம், அபயம் என்கிற நான்கு சின்னங்களுடைய நான்கு கைகளை உடையவையாகி உள்ளன மிகவும் ஒளியுள்ள கிரீடம் குண்டலம் முதலிய எல்லா ஆபரணங்கள் அல்லது அணிகலன்கள் தரித்தவராகி உள்ளார் ஹரி. ப்ரணவத்தின் எட்டு அம்ஶங்களை பகவானின் எட்டு ரூபங்கள் பிரதிபலிக்கின்றன.

**குறிப்பு:**– ப்ரணவம் என்பது ஓம்காரமாகும், ஓம்காரம் என்பது அகரம், உகரம், மகரம், பிந்து, நாதம், கோஷம், ஶாந்தம், அதி ஶாந்தம் என்கிற எட்டு பாகங்களை (அம்ஶங்களை) உடையன. விஸ்வ, தைஜஸன், ப்ராஜ்ஞன், துரீயன், ஆத்மா, அந்தராத்மா, ஜ்ஞானாத்மா, பரமாத்மா என்கிற எட்டு பரமனின் ரூபங்கள், ப்ரணவத்தின் எட்டு அம்ஶங்களின் ப்ரதி பாத்யமாக உள்ளன.

32) **ஸ்ரீமத் ப்ரணவாதி அஷ்டமஹாமந்த்ர பாத்ய அஷ்ட ரூபாத்மக;**

**கருத்துரை:**– ஸ்ரீ ஹரியானவர் ப்ரணவம் முதலிய எட்டு மகாமந்திரங்களின் பிரதிப் பாதிப்பாக (ப்ரதிபாத்யராக) எட்டு ரூபங்கள் உள்ளவராகி உள்ளார்.

**குறிப்பு:**– எட்டு மஹாமந்திரங்கள் ப்ரணவம் (ஓம்) வ்யாஹ்ருதி (பூ:புவ:ஸ்வ:) அஷ்டாக்ஷரம் (ஓம் நமோ நாராயணாய) ப்ரஹ்மகாயத்ரீ (தத்ஸவிதுர்வரேணியம், பர்கோ தேவஸ்ய தீ மஹி, தியோயோந: ப்ரசோதயாத்) த்வாதஶாக்ஷரம் (ஓம் நமோ பகவதே வாஸுதேவாய) புருஷஸூக்தம் மாத்ருகா மந்த்ரங்கள் (அ முதல் க்ஷ வரையிலான 51 எழுத்துக்கள்), ஷடக்ஷரம் (ஓம் விஷ்ணவே நம: என்பவைகளாகும்.)

33) **மந்த்ராத்யாயோக்த பூவராஹாதி அஶேஷ வைஷ்ணவ மந்த்ர ப்ரதி பாத்ய பூவராஹாதி அஶேஷ ரூப விஶேஷாத்மக:**

**கருத்துரை:**– மந்த்ர அத்யாயத்தில் கூறப்பட்ட பூவராஹன் முதலிய அநேக வைஷ்ணவ மந்திரங்களின் ப்ரதிபாத்யமாகி உள்ள பூவராஹன் முதலிய அனேக ரூப விஶேஷங்கள் உடையவர் ஸ்ரீ ஹரி.

(மந்த்ர அத்யாயம் தந்த்ர ஸார க்ரந்தத்தின் ஒரு பகுதி பல தேவதா-உபாஸனா மந்த்ரங்களை உள்ளடக்கியது)

34) ரமாதி மந்த்ர ப்ரதி பாத்ய, ரமாதி நிஷ்ட, ரமாதி நாமக, ரூப விஶேஷாத்மக;

**கருத்துரை:–** *(ஸ்ரீ ஹரியானவர் ரமா முதலிய மந்த்ரங்களின் ப்ரதிபாத்யராகி இருந்துக் கொண்டு ரமா முதலியவர்களில் அந்தர்கதனாகி இருந்துக் கொண்டு ரமா முதலிய பெயர், ரூபங்களுடன் இருந்துக் கொண்டு விளங்குகிறார். (பகவான் எல்லாரிடமும், அந்த அந்த ரூபங்களின், அந்த அந்த நாமங்களில் இருக்கிறார்). அந்த அந்த ரூபங்களின் அந்தர் யாமியாக உள்ளார். மற்றும் அவைகளுக்கு பின்னமாக (வேறாக), லோக விலக்ஷணராக, ஶஸ்வதேக பிரகாரத்தில், அசிந்த்ய சக்தியுடையவராகி விளங்குகிறார்.)*

35) **ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹாத்மக, பரமதயாளோ, க்ஷமா, ஸமுத்ர, பக்த வத்ஸல, பக்தாபராத-ஸஹிஷ்ணோ, தேஶ- கால அதிபதே, தேஹேந்த்ரியாதிபதே, சூர்ய வம்ஶ த்வஜ, ரகுகுலதிலக, லக்ஷ்மண-பரத-ஶத்ருக்னாக்ரஜ, ஸ்ரீ ஹனுமதுபாஸிதசரண, ஸீதாபதே, ஸ்ரீராமசந்திர;**

**கருத்துரை:–** இதுகாறும் ஸ்ரீ முக்யப்ராணதேவரின் உள்ளே வாசம்புரியும் பகவானின் மஹிமைகளை ஸ்ரீராயர் விவரித்தார். இப்பொழுது, அந்த இறைவனை விளித்துக்கூப்பிட்டு, ஸங்கல்ப பூர்வகமாக, ஸகல கார்ய ஸமர்ப்பணம் செய்கிறார்.

*ஸ்ரீஹரியே ! ஸ்ரீ லக்ஷ்மீ நரஸிம்ஹன் ரூபமாக உள்ளவரே! மிகவும் தயையுள்ளவரே! பொறுமைக்கடலே! அன்பர்களின் பக்தர்களின் பிரியமானவரே! பக்தர்கள் புரியும் குற்றம் குறைகளை பொறுத்தருள்பவரே! தேசத்திற்கும் காலத்துக்கும் அதிபதியானவரே! தேஹம் இந்த்ரியங்களின் அதிபதியே! சூர்யவம்சக்கொடியே! ரகுகுலத்துக்குத் திலகம்போன்று உள்ளவரே! லக்ஷ்மணன் (இலக்குவன்), பரதன், சத்ருக்னன் முதலியவர்களின் மூத்தோனே! ஸ்ரீ அனுமானரால்*

ஸேவிக்கப்பட்ட திருவடியுடையவரே! ஸீதாதேவிக்கு நாயகரே! ஸ்ரீராமசந்த்ர ப்ரபுவே !

36) த்வதாஜ்ஞயா, த்வத் ப்ரஸாதாத், த்வத்ப்ரேரணயா, த்வத்ப்ரீத்யர்தம், த்வாம் உத்திஶ்ய, த்வாம் அனுஸ்மரன்னேவ, த்வதாஜ்ஞயா, நியதேன, மந்நியாமகேன;

**கருத்துரை:–** உன் ஆணையால், உன் அருளால். உன்தூண்டுதலால், உன்விருப்பம் பொருட்டு, உன்னை உத்தேசித்து, உன்னை நினைத்துக் கொண்டே (நான்) ஸங்கல்பம் செய்கிறேன். என்னுடைய நியாமகராகிய வாயுதேவரின் நியதிப்படி, உன் ஆணைப்படி, ஸங்கல்பம் செய்கின்றேன்.

37) ஸத்தாப்ரத வாயுநாமக, சேஷ்டாப்ரதப்ராணநாமக, தாரணாப்ரத தர்மநாமக, முக்திப்ரத பக்தி நாமக ரூபவிஶேஷை:,

**கருத்துரை:–** முக்யப்ராணர், இருத்தல் (ஸத்தா) என்கிறப்பண்பை தரும் வாயு என்றப் பெயரில் உள்ளார் அவரே, அசைவித்தல் (சேஷ்டா) என்கிற பண்பைத்தரும் ப்ராணன் என்கிற பெயரில் உள்ளார். அவரே தாங்குதல் தாரண என்கிறப்பண்பைத்தரும் தர்மர் என்கிற பெயரில் உள்ளார். அவரே வீடுப்பேற்றைத்தரும் பக்தி என்கிறப் பெயரில் உள்ளார் (அப்பேர்ப்பட்ட முக்யப்ராணர் மூலம் ஸங்கல்பம் செய்கிறேன்).

38) மத்-ஹ்ருதி-ஸ்திதேன-பரம-தயாளுனா, க்ஷமா ஸமுத்ரேண, பக்த வத்ஸலேன, பக்தா-பராத - ஸஹிஷ்ணுனா, ஸர்வஸ்வாமினா, ஸர்வப்ரேரகேண, ஸர்வ தாத்விக தேவதா-ப்ரேரகேண. ஸர்வதாத்விக அஸுரபஞ்ஜகேன,

**கருத்துரை**:– முக்யப்ராணர் என் இருதயத்தில் இருக்கிறார். அவர் கருணைக்கடல்; தயாளு; பிழைகளைப் பொறுக்கும் பண்பில் கடலைப்போல விரிந்தவர்; பக்தர்கள்மேல் அன்புள்ளவர்; பக்தர்கள் புரியும் குற்றங்கள் குறைகளைப் பொறுப்பவர்; எல்லோருக்கும் ஸ்வாமி, யஜமானர்; எல்லோரையும் தூண்டுபவர்; எல்லா தத்தவாபிமானி தேவதைகளையும், எல்லா தத்துவாபிமானி தைத்யர்களையும் தூண்டுபவர்; மற்றும் எல்லா தத்துவாபிமானி அஸுரர்களைப்பிளப்பவர். *(அந்த ஶக்தியுள்ள வாயுவின் மூலம் ஸங்கல்பம் செய்கிறேன்.)*

39) **ததா தத்ப்ரேரணா-ப்ரயுக்த அஶேஷதுர்மத பஞ்ஜகேன, அதஏவ ப்ரபஞ்ஜன ஶப்தவாச்யேன, ப்ரதிதினம் ப்ரதிக்ஷணம் புத்திஶோதகேன;**

**கருத்துரை**:– தைத்யர்கள் மூலமும் அவ்வாறே தைத்யர்கள் (தீயச் சக்திகள்) ப்ரேரணையின் மூலமும், உண்டாகும் (எண்ணற்ற) கெட்ட மதங்களைப்பிளப்பவர் ஸாக்ஷாத் வாயு பகவான், ஆகையால்தான் வாயுவுக்கு ப்ரபஞ்ஜனர் (நன்றாகப் பிளப்பவர்) என்கிறப் பெயர் உள்ளது. மற்றும் வாயுதேவர் தினந்தோறும் ஒவ்வொரு நொடிகளிலும், நம்முடைய புத்தியைத் தெளிவாக்குகிறார். (தூய்மைப்படுத்துகிறார்) *(அப்பேர்ப்பட்ட வாயுவின் மூலம் ஸங்கல்பம் செய்கின்றேன்)*

40) **ஸர்வகர்ம-கர்த்ரா, ஸர்வகர்ம-காரயித்ரா, ஸர்வகர்ம-ஸ்வாமினா, ஸர்வ கர்ம-ஸமர்பகேண, ஸர்வ கர்ம** பலபோக்த்ரா, ஸர்வ கர்ம - பலபோஜயித்ரா, ஸர்வ கர்ம ப்ரேரகேண, ஸர்வ கர்மமோத்போதகேன; ஸர்வகர்ம ஶுத்திப்ரதேன, ஸர்வகர்மஸித்திப்ரதேன, ஸர்வ கர்ம நிஷ்டேன; ஸர்வ கர்ம ஸாக்ஷிணா, ஸர்வ கர்ம நிஷ்ட பகவத்ரூபோ - பாஸகேன, அஶேஷ ஜீவநிஸ்ஸங்க்ய அநாதி - காலீன தர்மாதர்ம - த்ரஷ்டு;,

**கருத்துரை:–** வாயுபகவானே எல்லாருடைய கர்மங்களைச் செய்கிறார். எல்லோர் மூலம் கர்மங்களைச் செய்விக்கிறார்; எல்லாகர்மங்களுக்கு யஜமானராக (ஸ்வாமியாக) உள்ளார்; எல்லோரும் செய்யும் எல்லா கர்மங்களையும் ஹரியிடத்தில் ஸமர்பணம் செய்கிறார்; எல்லா நற்கருமங்களின் பலன்களைப் புஞ்ஜிக்கிறார்; எல்லோருக்கும் கரும பலன்களை உண்ணுவிக்கிறார் (அதாவது உண்ண வைக்கிறார்); எல்லா கர்மங்களையும் செய்யத்தூண்டுகிறார். (ப்ரேரிக்கிறார்) எல்லா கர்மங்களின் ஸம்ஸ்காரங்களைத் தூண்டி விட்டு கர்மங்களின் செய்கைகளைத் வளர்ப்பிக்கிறார். எல்லா கர்மங்களின் செய்கைகளைத் தூய்மைப்படுத்துகிறார்; எல்லா கர்மங்களின் பலன்களை பயன்தருமாறுச் செய்கிறார்; எல்லா கர்மங்களில் சிரத்தை, நிஷ்டை முதலியவைகளைத் தருகிறார். எல்லா கர்மங்களுக்கும் ஸாக்ஷியாக உள்ளார்; எல்லா கர்மங்களைத் தூண்டுவிக்கிற பகவானின் ரூபங்களை உபாஸிக்கிறார்; மற்றும் வாயு தேவர், எண்ணற்ற ஜீவர்களின் எண்ணற்ற காலம் முதற்கொண்டு வரும் அநாதிகால-தர்மம், அதர்மம், முதலியவைகளைப் பார்க்கிறார்.

*(ஜீவர்களின் அநாதி கர்மங்களின் தர்மாதர்மங்களைப் பார்க்கும் வல்லமைப் பெற்றவர்) (அப்படிப்பட்ட வாயுவின் மூலம் ஸங்கல்பம் செய்கின்றேன்.)*

41) **ஸ்வேச்சயா உத்போதகேன, தத்வாசக கபிலோ பாஸகேன, ரமா-வ்யதிரிக்த, பூர்வப்ரஸித்த-வ்யதிரிக்த, அனந்த வேத ப்ரதிபாத்ய முக்ய தமேன, அனந்த குண - பரிபூர்ணேன, ஸர்வ தோஷ தூரேண;**

எல்லாம் ஜீவர்களின் கர்மங்களை உத்போதகம் செய்பவர் வாயுதேவர் (கர்மபலன்களை வெளிக்கொணரச் செய்பவர்). அவ்வாறு செய்யும் சக்தி ஹரியினுடைய கபில மூர்த்தி ரூபத்தில் உள்ளது. அவ்வளவு மகிமைப்பொருந்திய கபிலதேவரை வழிப்படுவதால், வாயுதேவருக்கும் உத் போதகசக்தி உள்ளது. வேதங்கள் எல்லாம் பரம முக்ய

வ்ருத்தியால் ஹரியைக் கொண்டாடுகின்றன. அதாவது, ஸர்வவேத ப்ரதிபாத்யராகி உள்ளவர் ஹரி. அவருக்கு அடுத்தப்படியாக ரமா தேவி. வேத மந்த்ர ப்ரதிபாத்யளாகி உள்ளாள். இவ்விருவர்களைத்விர்த்து எண்ணற்ற எல்லா வேதங்களின் ப்ரதிபாத்யமாக உள்ளவர் வாயு தேவர். வாயுதேவர் எல்லாரிலும் மிகச்சிறந்தவர் (ஜீவோத்தமர்). முடிவற்ற குணங்களினால் நிரப்பட்டவர், எவ்வித தோஷங்களும் அற்றவர். (.அவர்ல மூலம் ப்ராதஸ்ஸங்கல்பம் செய்கிறேன்).

42) த்வச்சித்தாபிஜ்ஞேன, த்வச்சித்தானுஸாரிசித்தேன, த்வத்பரமானுக்ரஹபாத்ர பூதேன,.

**கருத்துரை:-** *(பகவான் ஆன ஹே! ராமசந்தர ப்ரபோ!)* வாயுதேவர். உன்னுடைய உள்ளத்தை நன்கு அறிந்தவர்; உன் உள்ளத்தின் படி காரியங்களை நடத்தும் திறன் பெற்றவர். உன்னுடைய பேரருளுக்கு பாத்திரமானவர். *(அவர்மூலம் ஸங்கல்பிக்கிறேன்)*

43) மத்யோக்யதாபிஜ்ஞேன, ஶ்ரீ பாரதீ ரமணேன, ருத்ராத்ய ஶேஷதேவதோபாஸித - சரணேன, மம ஸர்வாவஸ்தாஸு சித்ரதா, விசித்ரதா, த்வதுபாஸகேன, ஶ்ரீ முக்யப்ராணேன ப்ரேரித: ஸன்,

**கருத்துரை:-** (ஹேராமா!) வாயுதேவர், என் தகுதியை அறிந்தவர்; பாரதீயின் கணவர்; ருத்ரன் முதலிய எண்ணற்ற தேவர்களால் உபாஸிக்கப்படும் திருவடிவுடையவர்; எல்லாநிலைகளிலும் உள்ள உன்னுடைய சித்ரவிசித்ர ரூபங்களை உபாஸிப்பவர்; உன் பக்தர் ஶ்ரீ முக்யப்ராண ஸ்வாமியால் தூண்டப்பட்டவனாகி, (பிரேரிக்கப் பட்டவனாகி) (உன்னுடைய பூஜாரூப கர்மக்ரியா) ஸங்கல்பம் செய்கின்றேன்.

44) த்வத் ஸம்ஸ்ம்ருதி பூர்வகம் ஶயனாத் ஸமுத்தாய, ஆத்யதனம் ஸ்வ-வர்ணா ஶ்ரமோசிதம் தேஶ கால - அவஸ்தோசிதம், நித்ய, நைமித்திக, காம்ய-பேதேனத்ரி விதம் த்வத் பூஜாத்மகம்-கா்ம, யதாஶக்தி யதாஜ்ஞப்தி, யதா வைபவம் கரிஷ்யே ॥

**கருத்துரை:–** *(லௌகீகவைதீக.. என்று ஆரம்பித்தச் சொற்றொடர் கரிஷ்யே என்கிற இடத்தில் தான் முடிகிறது. இவ்வளவு பக்கங்களில் கூறியவை எல்லாம் இந்த ஒரு வாக்கியத்தின் பகுதிகளேயாகும்.)*

(ஹே ராமா) உன்னுடைய நன்நினைவுடன் படுக்கையிலிருந்து எழுந்து, இன்றைய நாளன்று, என்னுடைய வருணம், ஆசிரமம் இவைகளுக்குத் தகுந்த அம்மாதிரியே - இடம், காலம், நிலைகளுக்கு, தகுந்த, நித்யம், நைமித்திகம், காம்யம் என்கிற வேறுப்பாடுகளாய் உள்ள மூவ்வித கருமாக்களை, உன்னுடைய பூஜை என்கிற, முறையில், என்னுடைய சக்திக்குத் தகுந்தப் படி, என்னுடைய அறிவிற்குத் தகுந்தப்படி என்னுடைய பொருளாதார நிலைக்குப்படி செய்கிறேன்.

45) மதாஜ்ஞா காரிபி: வித்யா ஸம்பந்திபி:
தேஹஸம்பந்தி பிச்சத்வதீயை:, அஶேஷ ஜனை:,
த்வத்ஸர்வகர்த்ருத்வ, காரயித்ருத்வா-
த்யனுஸந்தான பூர்வகம் காரயிஷ்யே ச ॥

**கருத்துரை:–** *(ஹே ராமா)* என்னுடைய ஆணைக்குக் கட்டுப்பட்டவர்களாலும் என்னில் கல்விக்கேள்விகளில் ஈடுப்பட்டவர்களாலும், என்னில் உடலினால் ஸம்பந்தப்பட்டவர்களாலும், மற்றும் உன்னுடைய எல்லாச் செயல்கள் புரியும் திறன் மற்றவர்கள் மூலம் செயல்ப்படுத்தப்படும் திறன், இவைகளை நன்றாக நினைவுக்குக் கொணர்ந்து, உன் பூஜா ரூபமான கருமங்களைச்

செய்விக்கின்றேன் (நான், என் சுற்றத்தார் மூலம், உன் நினைவுடன் கூடிய மனதுடன், அவர்களின் கருமங்களைச் செய்விக்கின்றேன்.)

**"இதி ஶ்ரீராகவேந்த்ராக்ய யதினா க்ருதமஞ்ஜஸா**
**ப்ராத: ஸங்கல்பகத்யம் - ஸ்யாத் ப்ரீத்யை**
**மாதவ மத்வயோ: । ஶ்ரீ க்ருஷ்ணார்ப்பணமஸ்து ॥"**

**கருத்துரை:-** இவ்வாறு ஶ்ரீராகவேந்த்ரர் என்றுப் பெயர் உள்ள யதியால் பக்திபூர்வமாகச் செய்யப்பட்ட ப்ராதஸ்ஸங்கல்ப கத்யம் என்கிற க்ரந்தம் (காலைத் தீர்மான உரைக்கோவை நூல்) மாதவன் என்கிற விஷ்ணுவுக்கும், மத்வர் என்கிற வாயுவுக்கும் ப்ரீதிகரமாக விளங்கட்டும்! (பிரியமாக இருக்கட்டும்).

திருக்கண்ணனுக்கு அர்ப்பணம் ஆகட்டும் ।

இதி ஶ்ரீமத்ராகவேந்த்ரயதி ஶிரோமணிபிர் விரசிதம்
ப்ராத: ஸங்கல்பகத்யம் ஸமாப்தம்

இவ்வாறு ஶ்ரீ இராகவேந்த்ர யதி இயற்றிய
காலைத் தீர்மான உரைக்கோவை முடிந்தது.

ஶ்ரீராகவேந்த்ர யதினா க்ருத ஸங்கல்ப கத்யஸ்ய ।
த்ராவிடானு வாதேனே ஸுப்ரியதாம் மாதவ மத்வௌ ॥

**கருத்துரை:-** ஶ்ரீராகவேந்த்ர யதினால் செய்யப்பட்ட ஸங்கல்ப கத்யத்தின் தமிழ் மொழியாக்கத்தினால் மாதவரும், மத்வரும் நன்றாகப் ப்ரீதி அடையட்டும் (ப்ரீதி அடையட்டும்.)

॥ இதி ஶ்ரீரங்கராயாத்மஜேன ஶ்ரீதரேன க்ருதம் அனுவாதம் ஸமாப்தம் ॥ இப்படியாக, திரு ரங்கராவின் குமாரன் ஶ்ரீதரனால் செய்யப்பட்ட மொழிப்பெயர்ப்பு முற்றிற்று.

---

# ॥ ஸாராம்ஸம் ॥

## (கருத்துச் சுருக்கம்)

ஒலிக்குறிகள், எழுத்துக் குறிகள், இவைகளால் ஆன உலகியல் மற்றும் மறையியல் வழக்குச் சொற்கள், ரிக்வேதம் முதலிய மறைகள், விஷ்ணுமந்த்ரம், புருஷஸூக்தம், காயத்ரீ, வாஸுதேவ மந்த்ரம், நாராயண மந்த்ரம், வ்யாஹ்ருதி மந்த்ரம், மாதுருகா மந்த்ரம், பிரணவ மந்த்ரம் இவைகளின் உட்பொருளாக உள்ள இறைவன் ஹரியை வழிப்படுபவரும், பாபமற்றவரும், தைத்யர்களால் தொட முடியாத வரும், விஷ்ணு, இலக்குமியைத் தவிர்த்து மறைகளால் முக்கியமாக போற்றப்படுபவரும், எண்ணற்ற ஜீவர்களின் நியாமகரும், எண்ணற்ற இறைவனின் உருவங்களின் செயல்களைச் அறிந்தவரும், முக்யப்ராணரின் அவதாரம் ஆனவரும், தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி இறைவனின் கட்டளையைத் தலைமேற்கொண்டு, கர்ம பூமியான பாரத நன்னாட்டில் அவதரித்தவரும், நன்னூல்கள் இயற்றியவரும், கெட்ட மதங்களை அழித்தவரும் அநாதிகாலமாக வந்த வைஷ்ணவ மதத்தை நிறுவியவரும், இறைவனின் கருணைக்குப் பாத்திரமானவரும், இறைவனால் தரப்பட்ட வரத்தையுடையவரும், முப்பத்திரண்டு ஸாமுத்திரிகா லட்சணங்களுடன் கூடியவரும், குருவாகி தன் சீடர்களின் அறியாமையை விலக்கியவரும், ஏழுகோடி வைஷ்ணவ மந்திரங்களை ஜபிப்பவரும், பகவானின் எண்ணற்ற ரூப-சக்தி-குணங்கள்-செயல்கள்-நிலைகள் இவைகளை நன்கறிந்துக் கடவுளை வழிப்படுபவரும், கருணைக் கடலும், பக்தர்களின் ப்ரியமானவரும், கடவுளிடம் நம் சார்பாக முறையிடுபவரும், இறைவனை எல்லாவிடத்திலும், எவ்வித பேதமின்றி காண்பவரும், தன்னுள்ளே எவ்விதக் குறைகள் அற்றவரும், நம்முடைய ஆதிகுருவுமானவரும், வாயுவின் மறு

உருவமானவரும் ஆன ஸ்ரீமதானந்த தீர்தர் என்கிற ஸ்ரீமத்வ குருராயரின் அந்தர்யாமியாக விளங்கும், அநிருத்த, ப்ரத்யும்ன, ஸங்கர்ஷண, வாஸுதேவ ரூபங்களையுடையவரும், லக்ஷ்மீ வ்யாஸராக உள்ளவரும், பாற்கடலில் பள்ளிக் கொண்ட பத்மநாப ரூபியாக உள்ளவரும், பிரம்மாண்டத்திற்கு வெளியே சுத்த ஸ்ருஷ்டியைச் செய்து, உலகினைக் காக்கும் சாந்திபதி அநிருத்த ரூபம், உலகினைப் படைக்கும் க்ருதிபதி ப்ரத்யும்ன ரூபம், உலகினை அழிக்கும், ஜயாபதி ஸங்கர்ஷண ரூபம், முக்தர்களுக்கு வீடுபேற்றை அளிக்கும், மாயாபதி வாஸுதேவரூபம், இவைகளைத் தன்னிடமிருந்தேத் தோற்றுவிப்பவரும், ப்ரளய ஜலத்தில் ஆலிலையில் பள்ளிக் கொண்டவரும், ப்ரளயத்தில் எல்லா வஸ்துக்களையும், தன்னுள் வைத்தவரும், காயத்ரீ, ஸவித்ரு, ப்ருஹத், ஸரீர, சூன்ய, கால, கேவல, ப்ரஹ்மா, அனந்த முதலிய அநேகப் பேர்களில் விளங்குபவரும், காயத்ரீ, பூதவாக், ப்ருதீவி, ஶரீரம், ஹ்ருதயம் என்கிற காயத்ரீயின் ஆறு ரூபங்களாகவும் லோக, வேத, ஸமீர, ரமா முதலிய காயத்ரீயின் நான்குபாதங்களின் ப்ரதிபாத்யராகவும் உள்ளவரும், வைகுண்டம், அனந்தாஸனம், ஸ்வேதத்வீபம் இவைகளில் வசிப்பவரும், ரமாதேவியால் ஸேவிக்கப்பட்டவரும், சக்ரம், சங்கம், வரம், அபயம் முதலிய ஹஸ்தங்கள் உடையவரும், எல்லா மந்த்ரங்களின் உட்கிடையாக விளங்குபவரும், கருணைக் கடலானவரும், பக்தர்கள் பிழைகளைப் பொறுப்பவரும், தேசம், காலம், தேகம், இந்திரியம் இவைகளின் அதிபதியாக ஆனவரும், சூரியவம்சம்-ரகுவம்சங்களில் உதித்தவரும், லக்ஷ்மணன், பரதன் சத்ருக்னன்- இவர்களின் தமையனாரானரும், ஹனுமாரால் வணங்கப்பட்ட அடிகளை உடைய, ஸீதாதேவியின் நாயகராகவும் ஆன ஹே இராமச்சந்திர தேவனே! உன் ஆணையால், உன் அருளால், உன் தூண்டுதலால் உன்பொருட்டு, உன்னைக் குறித்து, உன்னை நினைத்துக் கொண்டு, என்னுடைய நியாமகரான, ஸத்தா, சேஷ்டா, தாரண,

முக்தி இவைகளைத் தரும் வாயு, ப்ராண, தர்ம, பக்தி முதலிய பெயர்களையுடையவரும், எல்லா தத்வாபிமானி தேவர்களையும் எல்லா தத்வாபிமானி தைத்யர்களையும் பிரேரிப்பவரும், ப்ரபஞ்சன என்கிற பேர் உடையவரும், எல்லா கர்மங்களைச் செய்து, செய்விப்பரும், எல்லா கர்மங்களை பிரேரிப்பவரும், கர்ம ஸாக்ஷியாக உள்ளவரும், எண்ணற்ற ஜீவர்களின் தர்மாதர்மங்களைக் காண்பவரும், கபிலதேவரின் பக்தரும், குணங்களால் நிறைந்தவரும், தோஷங்கள் அற்றவர் ஆனவரும், மற்றும் உன்னிச்சைப்படி நடப்பவரும், உன் கருணைக்குப் பாத்திரமானவரும், பாரதீயின் கணவரும், ருத்ராதி தேவர்களால் ஸேவிக்கப்பட்டவரும், என்னுடைய எல்லா நிலைகளிலும் உள்ளவரும், உன்பக்தரும் ஆன, ஸ்ரீ முக்யப்ராண தேவரால் ப்ரேரிக்கப்பட்டு உன் நினைவாகவே, படுக்கையிலிருந்து எழுந்து, இன்றைய எல்லா, என்னுடைய வர்ணம், ஆசிரமம் இவைகளுக்குத் தகுந்த நித்ய நைமித்திக, காம்ய என்கிற மூவ்வகையான கர்மங்களை உன் பூஜை வடிவாக என் சக்திக்குத் தகுந்தபடி, என் அறிவிற்கு எட்டியபடி உன் ப்ரீதியின் பொருட்டுச் செய்கிறேன். மற்றும், என் ஆணைக்கு உட்பட்டவர்கள், என் சீடர்கள், என் உறவினர்கள் முதலிய என்னுடைய ஜனங்களால் உன்னில் அனுஸந்தானத்துடன் எல்லா கர்மங்களையும் செய்விக்கின்றேன்.

## *(ஸாராம்ஸத்தின் ஸாராம்ஸம்)*
## *(கருத்துரையின் - சுருக்கவுரையின் தெளிவுரை)*

(ஸ்ரீ இராகவேந்த்ர தீர்த்தர், அவர்கள் காலையில் எழுந்தவுடன் எடுத்த தீர்மான உறுதி மொழியை இந்நூலின் மூலம் தெரியப்படுத்துகிறார். அது அனைவருக்கும் பொதுவானது. எல்லோரும் இத்தீர்மானத்தை காலையில் எழுந்திருக்கும் பொழுதேச் செய்யவேண்டும்.)

நம்முடைய ஆதிகுருவான ஸ்ரீ மதானந்த தீர்த்தர் என்கிற ஸ்ரீ மத்வாச்சாரியாரின் உள்ளே விளங்கும் ஸீதாபதியான ஹே ராமச்சந்த்ர ப்ரபுவே! உன் ஆணையால், உன் அருளால், உன் தூண்டுதலால், உன் ப்ரீதியின் பொருட்டு, உன் நினைவாக, உன் பூஜை என்கிற முறையில், உன் பக்தன் ஸ்ரீமுக்யப்ராண தேவரால் தூண்டப்பட்டு, அவர்மூலமாக, எல்லா கர்மங்களையும் என் சக்திக்குத் தகுந்தவாறு, என் அறிவிற்குத் தகுந்தபடி, இன்று செய்கிறேன் ! மற்றும் என்னைச் சுற்றியுள்ளவர்களையும், உன் பூஜை என்கிற முறையில் பற்பல கருமங்களைச் செய்விக்கச் செய்கின்றேன். எல்லாம் உனக்கே !

*ஸ்ரீ க்ருஷ்ணார்பணமஸ்து*

## பிற்சேர்க்கை

## சிறப்புக் குறிப்புகள்

*1.* ஒருசொல்லின் பொருளை அறிவதற்கு மொழியியலில் பல வழிமுறைகள் உள்ளன. ரூடி, யோகம், மஹாரூடி, முக்யவ்ருத்தி என்று பல வழி முறைகளில் ஒருச் சொல்லின் சரியானப் பொருளைச் சந்தர்பத்துக்குத் தகுந்தவாறு அறியலாம். இவைகளின் விரிவான பண்புகளை மொழியியல் நூல்களில் காணலாம். ஈண்டு இடச்சுருக்கத்தை மனதிற் கொண்டு அவைகளை விவரிக்க இயலவில்லை பரம முக்யவ்ருத்தி என்ற முறையில் உலகிலுள்ள எல்லா சொற்களும், ஒலிகளும், கடவுளாகிய ஸ்ரீஹரியையேக் குறிக்கின்றன என்று ஸ்ரீமத்வாச்சாரியார் தம்முடைய ப்ரஹ்ம-சூத்ர பாஷ்யங்கள் முதலிய நூல்களில் உரைத்துள்ளார். வேதங்கள் என்ற மறைகள் கூறும் சொற்கள் வைதீகச் சொற்கள். மற்றச் சொற்கள் எல்லாம் லௌகீகச் சொற்கள் (உலகியல் அல்லது வழக்கியல் சொற்கள்). சப்தங்கள் வரிவடிவாகவும், ஒலிவடிவாகவும் இருக்கின்றன. எடுத்துக் காட்டாக, மயில் அகவும் ஒலி, யானை பிளிறும் ஒலி, மேகம் கர்ஜிக்கும் ஒலி, இவைகள் ஒலிவடிவிலே உள்ளன. இவைகளை வரி

வடிவத்தில் எழுத்தில் சரியாகக் கொணர இயலாது. இவைகள் எல்லாம் கூட பரம முக்கிய வ்ருத்தியினால் ஸ்ரீ ஹரியைத் துதிக்கின்றன என்பது ஆசார்யாரின் அபிப்ராயம்.

அக்ஷரங்கள்-எழுத்துக்கள்-வரிவடிவானவை.

'அ' முதல் 'க்ஷ' வரையிலுள்ள 51 வடமொழி எழுத்துக்கள் (அக்ஷரங்கள்) அனாதி நித்யமானவை அதாவது, முதலற்ற, என்றும் உள்ள பதார்த்தம் ஆகும். (நித்யவஸ்து)

2. **வேதங்கள்** = ரிக், யஜுர், ஸாம, அதர்வண என்கிற நான்கு உட்பிரிவுகளைக் கொண்டன. ஓவ்வொன்றிலும், மந்த்ர ஸம்ஹிதை, பிராம்மணங்கள், ஆரண்யகங்கள், உபநிஷதங்கள் என்கிற நான்கு உட்பிரிவுகள் உள்ளன. அவைகளிலும், அஷ்டகம், வர்கம், காண்டம், அத்யாயம், சூக்தம் போன்ற பல பிரிவுகள் உள்ளன. இவையெல்லாம் ஒட்டுமொத்தமாக ஸ்ரீஹரியையே பரம முக்யவ்ருத்தியினால் துதிக்கின்றன.

3. புருஷ சூக்தம் இறைவனைக் குறித்துத் துதிக்கும் ஒரு துதித்திரட்டு இது ரிக்வேதத்தின் 10 வது புத்தகத்தில், மண்டலத்தில் 91,ம் அத்யாயத்தில் உள்ளது. மொத்தம் 16 ரிக்குகள் (செய்யுட்கள்) கொண்டது.

4. **விஷ்ணு மந்த்ரம்** = ஓம் விஷ்ணவே நம: என்கிற ஆறெழுத்து மந்திரம்.

5. காயத்ரீ : தத் ஸவிதுர் வரேண்யம் ! பர்கோ தேவஸ்ய தீ மஹி தியோயோந: ப்ரசோதயாத்-என்கிற மந்திரம்.

ரிக்வேதத்தில் 3 வது புத்தகத்தில் மண்டலத்தில் 4வது அத்யாயத்தில் 10 வது ரிக்காகி வருகிற மந்த்ரம் தான் காயத்ரீ மந்த்ரம்.

6. **வாஸுதேவ மந்த்ரம்**= ஓம் நமோ பகவதே வாஸுதேவாய என்கிற பன்னிரண்டு எழுத்து மந்திரம். (துருவன் ஜபித்த மந்திரம்)

7. **ஓம் நமோ நாராயணாய** = அஷ்டாக்ஷர மந்த்ரம்
= எட்டெழுத்து மந்திரம்

8. **வ்யாஹ்ருதி** = ஓம் பூ: ஓம்புவ:, ஓம்ஸ்வ: (ஸுவ:) என்கிற மந்திரம்-இது த்ரிவித வ்யாஹ்ருதி.

ஓம்பூ: ஓம் புவ: ஓம் ஸ்வ: ஓம் ஜன: ஓம் தப:, ஓம்மஹ: ஓம் ஸத்யம் என்பது ஸப்தவித வ்யாஹ்ருதி

9. **மாத்ருகா மந்த்ரம்** = 'அ' முதல் 'க்ஷ' வரையிலுள்ள 51 அக்ஷரங்கள் அந்த அக்ஷரங்களின் ப்ரதிபாத்ய ஹரியின் ரூபங்களை (அஜ முதற்கொண்டு நரஸிம்ஹ வரையிலான 51 ரூபங்களை) பற்றி கூறும் மந்திரங்கள்.

10. **ப்ரணவ மந்த்ரம்** = ஓம் காரம். ஓம் என்கிற மந்த்ரம் எட்டுப் பகுதிகளைக் கொண்டது. அவைகள் முறையே, அகரம், உகரம், மகரம், நாதம் பிந்து கோஷம், சாந்தம், அதி சாந்தம் ஆகும்.

11. **வேதங்களின் சுருக்கமே** புருஷசூக்தம். புருஷசூக்தத்தின் சுருக்கமே காயத்ரீ மந்த்ரம். காயத்ரீயின் சுருக்கமே **வ்யாஹ்ருதி** மந்த்ரம். வ்யாஹ்ருதியின் சுருக்கமே **ப்ரணவ மந்த்ரம்**. அதாவது ப்ரணவமாகிய ஓம்காரத்தில் எல்லா வேதங்களின் பொருட்களும் உள்ளன. அப்படிப்பட்ட பிரணவத்தை உபாஸிப்பவரில் தலைச்சிறந்தவர் முக்யப்ராணதேவர். முக்யப்ராணர் ஜீவோத்தமர். அவரே ஸ்ரீமத்வர்.

12. பரசுக்லத்ரயம் என்கிற பிரிவில் சேர்ந்தவர்கள் மூவர்கள் ஆவார்கள். அவர்கள் லக்ஷ்மீ, பிரம்மா (வாயு), ஸரஸ்வதி (பாரதீ) ஆவார்கள். இவர்களுக்கு எக்காலத்திலும், எக்காரணத்தைக் கொண்டும், தீயச்சதிகளின் எதிர்ப்பு உண்டாகாது. அதாவது, இவர்களுக்குக் கலி ஸம்பர்க்கம் இல்லவே இல்லை.

13. **கர்மபூமி** = பாரத தேசம். மற்ற தேசங்கள் போக பூமி யாகும்.

14. வேதங்கள் பரம முக்யவ்ருத்தியினால் ஹரியைத் துதிக்கின்றன. அதன் பின் லக்ஷ்மீதேவியைத் துதிக்கின்றன. முக்யவருத்தியினால் வாயுதேவரைத் துதிக்கின்றன. ஆகையால் எல்லா வேதங்களினாலும் ப்ரதிபாத்யமானவர் ஸ்ரீ வாயுதேவர். (அதாவது, ஹரி, லக்ஷ்மீ பற்றிய விஶேஷமாகச் சொல்லும் வேதம் மந்திரங்களை தவிர்த்து, மற்ற வேதமந்த்ரங்களினால் துதிக்கப்படுவர் (மற்றதேவர்களுக்கு இவ்வாறு ஸமன்வயம் செய்யமுடியாது).

15. **ஸ்ரீ மத்வர் ஸச்சாஸ்த்ர கர்தர்** = 37 மூலக்ரந்தங்களை எழுதியவர்.

16. **துர்மத பஞ்ஜகர்** = ஸ்ரீமத்வர், அவைதீக மதங்களான பௌத்தம், (யோகாசாரம், வைபாஷிகம், மாத்யமீகம், விஜ்ஞானவாதம் என்கிற 4 பிரிவுகளைத் கொண்ட சூன்ய வாதமதம்) ஜைனம், சார்வாகம் இவைகளைக் கண்டித்தார். மற்றும் வைதீக மதங்களான நியாயம், வைஸேஷகம், ஸாங்க்யம், யோகம், பூர்வமீமாம்சை மதங்களின் கொள்கைளைக் கண்டித்தார். மற்றும் பாசுபதம், ஸாக்தம் போன்ற துர்மதங்களைக் கண்டித்தவர்.

வேதாந்த மதத்தின் தலைச்சிறந்த நூல் பிரம்ம சூத்ரங்கள் ஸ்ரீமத்வர் அவதரிப்பதற்கு முன், பிரம்ம சூத்ர நூலுக்கு 21 பேர்கள் பாஷ்யங்கள் எழுதியிருந்தார்கள். அவைகள் பிரம்ம சூத்ரங்களின் உட்கிடக் கையைச் சரியாக வெளிப்படுத்த வில்லை. ஆகையால் அவைகளையும் ஸ்ரீமத்வர் கண்டித்தார். அந்த பாஷ்யங்கள் எழுதியவர்கள் பின்வருமாறு உள்ளனர். பாரதீவிஜயர், ஸம்விதாவந்தர், ப்ரஹ்மகோஷர், ஸதானந்தர், உத்தவர், விஜயர், ருத்ரபட்டர், வாமனர், யாதவ ப்ரகாஸர், ராமானுஜர், ப்ர்த்ருப்ரபஞ்ஜர், த்ராவிடர், ப்ரஹ்மதத்தர், பாஸ்கரர், பிஶாசர், வ்ருத்திகாரர் (போதாயனர்), விஜயபட்டர், விஷ்ணு க்ராந்தர், வாதீந்த்ரர், மாதவதாஸர் மற்றும் ஸங்கரர்.

*17.* **32 லக்ஷணங்கள்** = *பஞ்ச தீர்க:, பஞ்சஸூக்ஷ்ம:, ஸப்தரக்த:, ஷட்உன்னத:! த்ரிப்ருது, த்ரிஷுகம் பீரோ, த்வாத்ரிம்ஸல்லக்ஷண ஸ்த்விதி !!*

**ஐந்து தீர்க்கங்கள்** : *1) புஜம், 2) நேத்ரம் 3) ஹனு (கன்னம்), 4) ஜானு (முழங்கால்), 5) நகம்.*

**ஐந்து ஸூக்ஷ்மங்கள்** : *6) த்வக் (தோல்), 7) கேஶ (மயிர்), 8) அங்குலி (விரங்கள்), 9) தந்த (பல்), 10) அங்குலி பர்வ (விரல் மேடுகள்).*

**ஸப்தரக்த** : *11) உள்ளங்கை, 12) உள்ளங்கால், 13) கண்முனை (கடைக்கண்), 14) தாலு (மேல் உதடு), 15) நாக்கு, 16) கீழ் உதடு, 17) நகங்கள்.*

**ஷட்உன்னத** : *18) மார்பு, 19) வயிறு, 20) நெற்றி, 21) தோள்பட்டை, 22) முன்கைகள், 23) முகம்,*

*த்ரிப்ருது 24) நெற்றி, 25) இடுப்பு, 26) மார்பு.*

**த்ரிஹ்ரஸ்வ** : 27) முழுங்கால் சிப்பு (கணுக்கால்), 28) கழுத்து, 29) ஆண்குறி.

**த்ரிகம்பீர** : 30) ஸத்வ (ஸ்வபாவம்) 31) ஸ்வரம் (குரல்) 32) நாபி (தொப்புள்).

ஸாமுத்ரிகா லக்ஷண ஸாஸ்த்ரப்படி உத்தம ஜீவர்களுக்கு 32 லக்ஷணங்கள் இருக்கவேண்டும். அதன்படி 1 லிருந்து 5 வரை எடுப்பாகவும், நீண்டதாகவும் இருக்கவேண்டும். 6 லிருந்து 10 வரை ஸூக்ஷ்மாக (நுண்ணியதாக) இருக்கவேண்டும். 11 லிருந்து 17 வரை சிவப்பாகவும், 18 லிருந்து 23 வரை உயர்ந்ததாகவும், 24 லிருந்து 26 வரை அகலமாகவும் இருக்கவேண்டும் 27 லிருந்து 30 வரை சிறுத்து இருக்கவேண்டும். 30 லிருந்து 32 வரை கம்பீரமாக இருக்கவேண்டும். இவ்வாறு எல்லோருக்கும் இருக்காது. உத்தம ஜீவர்களுக்கே இருக்கும். வாயுதேவருக்கு 32 லக்ஷணங்கள் உள்ளன. ருத்ரதேவருக்கு 28 லக்ஷணங்கள் உள்ளன. பரமாத்மா ஸ்ரீஹரிக்கோ விலக்ஷணமான அனந்தானந்த லக்ஷணங்கள் உள்ளன. மற்றும் உத்தமர்கள் பாதத்திலிருந்து சிரசுவரையில் 96 அங்குலம் உயரம் உள்ளவர்களாக இருக்கவேண்டும். அவர்களின் பாதத்தின் ஏழின் அளவு அவர்களின் கையின் நான்கின் அளவுக்கு ஸமமாகி இருக்கவேண்டும். இப்படிப்பட்ட லக்ஷணங்கள் உடையவர் வாயுதேவர் மத்வர் ஆவர். அவரிடம் உத்தம குருவுக்கு வேண்டிய மேற்படி தேக லக்ஷணங்கள் இருந்தன.

18. **7 கோடி மஹாமந்த்ரங்கள்** = ஸம்ஸ்க்ருத மொழியிலுள்ள மந்த்ரங்களின் (மஹாமந்த்ரங்கள்) = எண்ணிக்கை $2^{26}$-1 = 6, 71, 08, 863 = 7 கோடி (தோராயமாக.) மந்த்ரங்கள் என்பவை ஒரு அக்ஷரத்திலிருந்து 1000 அக்ஷரங்கள் கொண்டவைகளாக இருக்கலாம். அந்த மந்த்ரங்கள் 26 வகையான சந்தஸ் அல்லது யாப்புக்குள் கட்டுப்பட்டவையாக இருத்தல் வேண்டும் கணிதரீதியாகப் பார்த்தால் அவைகள் $2^{26}$-

1 ஆக வரும். ஆகையால், தோராயமாக அவைகளை ஏழு கோடி மந்த்ரங்கள் என்றுக் கூறுகின்றனர். வாயுதேவர் இந்த 7 கோடி மஹாமந்த்ரங்களையும் ஜபிக்கும் திறன் கொண்டவர். இம்மந்த்ரங்கள் மிகவும் ரகசியமானவை. வாயு தேவருக்கு மட்டும் தெரியும்.

19. **பகவான்** =ஐஸ்வர்யம், வீர்யம், யஶஸ், காந்தி, ஜ்ஞான, விஜ்ஞானம் முதலிய ஆறு குணங்களை யுடையவர் இறைவன் (கடவுள்).

20. பகவானின் ஒவ்வொரு ரூபத்திலும் அநேகரூபங்கள் உள்ளன. பகவானின் ஒவ்வொரு க்ரியையிலும் (செய்கையிலும்) அநேக க்ரியைகள் உள்ளன. அவ்வாறே ஒவ்வொரு குணங்களிலும் அநேக குணங்கள் உள்ளன. மற்றும் ரூப-க்ரியா - குணங்களுக்கிடையில் எவ்வித பேதமும் கிடையாது. இது கடவுளின் அசிந்த்யாத்புத சக்தியால் உள்ளது.

21) **குணோப ஸம் ஹாரம்** = குணோப ஸம்ஹார பூர்வகமாய் வாயுதேவர் பகவதுபாஸனை செய்கிறார். பகவத் குணங்களை எல்லாம் மனதினால் கிரகித்து, எவ்விதப் பிரிவுமின்றி, அதாவது பகவானின் எல்லா குணங்களையும் ஒருச்சேர, ஒரே ஸமயத்தில், தியானிப்பது தான் குணோப ஸம் ஹாரம் எனப்படும் அப்படிச் செய்யும் சக்தி, ஜீவர்களில், பிரம்மாவுக்கும், வாயுவுக்கும் மட்டும்தான் உண்டு. மற்ற ஜீவர்கள் அவர்களின் யோக்யதைகளை அனுசரித்துப் பகவானின் சில குணங்களை மட்டும் தியானிக்கிறார்கள். மனுஷ்ய உத்தமர்கள் பகவானின், ஸத், சித், ஆனந்த, ஆத்மா என்கிற 4 குணங்களைத் தியானிக்கிறார்கள். த்ருண ஜீவராசிகள் ஆத்மா என்கிற ஒரே குணத்தை உபாஸிக்கிறார்கள். ஆத்மா என்றால் ஸ்வாமி என்றுப் பொருள்.

22. **விஶேஷம்** = இது ஒரு தத்துவ விளக்கக் கொள்கை விஶேஷம் என்கிற தத்துவம் எந்த பொருளில், பேதமில்லாமல் இருப்பினும், பேதத்தைக் காட்டுவதாக உள்ளது. இது உலகுக்கு ஸ்ரீமத்வர் அளித்த மாபெரும் தத்துவமாகும். எடுத்துக் காட்டாக, வெண்மையான பால் எனகிறப் பொழுது, பாலையும், வெண்மையையும், நம்மால் இனம்கண்டுக் கொள்ளப்படுகிறது. ஆனால் மனதினால் பேதத்தை உணர முடிகிறது. இது விஶேஷம் என்கிறத்த தத்துவத்தின் மூலம் தான் ஸாத்யம். கடவுளுக்கும் அவருடைய குணம், க்ரியை, அவயம், அவதாரம், ஜாதி, அவஸ்தை ரூபம், இவைகளுக்குள் பரஸ்பரம் பேதம் இல்லவே இல்லை. இருந்தாலும் விஶேஷத்தின் மூலம், இவைகளின் தனித் தன்மைகளை உணருகிறோம்.

23. வாயுதேவர் எப்பொழுதும் எல்லா இடங்களிலும் லக்ஷ்மீ ஸமேதராக நாராயணதேவரின் எல்லா ரூபங்களையும் ஸாக்ஷாத்தாகக் காணும் ஸக்தியுள்ளவர்; நித்யாபரோக்ஷி எனப்படுபவர்; வாயுவுக்கு எப்பொழுதும் ப்ரக்ருதியின் கட்டுதல் இல்லை. வாயுதேவர் ரிஜுகணத்தில் சேர்ந்தவர் (ரிஜுகணத்தைச் சேர்ந்தவர்).

24. **ரிஜுகணம்** = ரிஜுகணத்தில் 100 உத்தம ஜீவர்கள் உள்ளனர். அவர்கள் கல்கியில் ஆரம்பித்து லாதவ்ய, முக்யப்ராண, ப்ரஹ்ம பர்யந்தம் உள்ளனர். இந்த 100 பெயர்களும் பதவிப் பெயர்களே. அப்பதவிக்கு வரும் தகுதிப் படைத்த ஜீவர்களே ரிஜுகணஸ்தர்கள் அவர்கள் ஒவ்வொரு பதவியிலும் 1 கல்பம் இருந்து, 99 வது கல்பத்தில் வாயுவாகவும், 100 வது கல்பத்தில் பிரம்மனாகவும் இருந்து பிறகு முக்தி அடைகிறார்கள். அவர்களுக்கு முதலில் 100 கல்ப ஸாதனம்; பிறகு ரிஜு பதவிகளில் 100 கல்ப ஸாதனம். பின்பே முக்தி. அவர்கள் நித்ய அபரோக்ஷிகள். அவர்களுக்கு ப்ரக்ருதி பந்தம் கிடையாது. அவர்களுடைய லிங்க தேகம் எரிந்த வஸ்திரம் போல பந்தகசக்தியற்றதாக இருக்கிறது. (தக்தபட ந்யாயம்.)

25. **ப்ரக்ருதிபந்தம்** = எல்லா ஜீவர்களுக்கும் அநாதி காலத்திலிருந்தே ப்ரக்ருதி என்கிற ஜடமய வஸ்துவின் ஸம்பந்தம் உண்டு. லிங்கதேஹம் எல்லாம் ஜீவர்களுக்கும் அநாதியாக உண்டு. ஜீவன் ஸ்வருபத்தில் அப்ராக்ருதன். ஆனால் ப்ரக்ருதி பந்தம் அநாதியாய் இருப்பதால் ஜீவ ஸ்வரூபம் வெளிப்படுவதில்லை. ஸாதனை மூலம் அபரோக்ஷம் அடைந்த ஜீவன், ப்ரளய காலத்தில், வாயுதேவருடன் கூட விரஜா நதிஸ்நானம் செய்யும் பொழுது, தவிடுப்பொடி உதிர்வதைப் போல ஜீவனுடைய லிங்கதேகம் நாசமடைகிறது. அதன் பின்பு அவன் ஸ்வரூப தேகத்திலேயே விளங்குகிறான். அதன் பின்பு அவனுக்கு ப்ரக்ருதிபந்தம் இல்லவே இல்லை. முக்தி அல்லது மோக்ஷம் என்பது ப்ரக்ருதி பந்தங்களை களைவதேயாகும். ஜீவன் தன் இயற்கையான ஸ்வரூபத்துடன் விளங்குவதேயாகும்.

26. நாம் இறைவனை எப்பொழுதும் லக்ஷ்மீ ஸமேதராகித் தான் வழிப்படவேண்டும். அதேபோல் ரமாஸஹித ஹரியை வாய்வாந்தர்கதனாகியே பஜிக்க வேண்டும். வாயுதேவரின் மூலமாகத்தான் வழிப்பட வேண்டுமேத் தவிர தனியாக வழிபடலாகாது. வாயுதான் நம்மை இறைவனிடம் அழைத்துச் செல்லும் சக்தி உள்ளவர்.

27. **ஸுத்த ஸ்ருஷ்டி வ்யூஹமூர்த்திக** = நாராயணன் மூலரூபி. பரமாத்மாவின் வ்யூஹமூர்த்திகள்: வாஸுதேவ, ஸங்கர்ஷண, ப்ரத்யும்ன, அநிருத்த ரூபங்கள். நாராயணனின் வ்யூஹ ரூபங்கள் மற்றும் மூலரூபம். இவ்வைந்துக்கும் பேதமே கிடையாது. பாஞ்சராத்ர ஆகமங்களில் இவ்வைந்து மூர்த்திகளை வ்யூஹ மூர்த்திகள் என்று குறிப்பிடுவார்கள். நாராயண ரூபத்திலிருந்து வந்த இந்த 4 ரூபங்களுக்கு ஸுத்த ஸ்ருஷ்டி ரூபங்கள் என்றுப் பெயர். (தூயப்படைப்பு உருவங்கள்).

28. **ஶுத்த ஸ்ருஷ்டி விசாரம்** = ப்ரளய கால ராத்ரியில் $^1/_8$ பாகம் பாக்கியிருக்கும் பொழுது, துர்காரூப ஸ்ரீலக்ஷ்மீ தேவி வேதங்களினால் ஹரியைத் துதிக்கும் காலை, ஸ்ரீ ஹரியானவர் யோக நித்திரையிலிருந்து எழுந்து, படைப்புத் தொழிலை ஆரம்பிக்கிறார். பின்பு, தன்னிடமிருந்தே, தன்னுடைய வாஸு தேவ, ஸங்கர்ஷண, ப்ரத்யும்ன, அநிருத்த ரூபங்களை ஸ்ருஷ்டிக்கிறார். இது ஈஶஸ்ருஷ்டி அல்லது ஸுத்த ஸ்ருஷ்டியாகும். படைப்பு என்பது நான்கு வகைப்படும். ஆண்டவன் புரியும் ஸ்ருஷ்டிகள் பின்வருமாறு :

1. ஆபூத்வாபவனம்
2. தேஹப்ராப்தி
3. பராதீன விஸேஷவாப்தி
4. ப்ராதுர்பாவம் அல்லது ஆவிர்பாவம்.

முன்னே இல்லாமல் பின்பு உண்டாகுவது அபூத்வா பவனம். (மண்ணிலிருந்து பானைஉண்டாவதுப்போல.) தேகத்தை அடைவது (ஜீவராஸிகள் பலவித தேகங்களைப் பெறுவது) தேஹப்ராப்தி. அநாதி கால வஸ்துக்கள் சில சிறப்புக்களையடைவது - பராதீன விஸேஷ அவாப்தி எனப்படும். (நித்ய வஸ்துகளில், ஜீவர்கள், மூலப்ரக்ருதி முதலியவைகள் உள்ளன. அவைகள் இறைவனைப் போன்ற ஸ்வதந்த்ர வஸ்துகள் இல்லை. அவைகள் இறைவனைச் சார்ந்துள்ள அஸ்வதந்த்ர வஸ்துகள் பராதீனமானவைகள்.) அவைகளில் உண்டாகும் மாற்றங்களே ப்ராதீன விஸேஷாவாப்தியாகும். ஜீவனுக்கு ஸம்ஸார அவஸ்தை வருவது, மூலப்ரக்ருதியின் மூலம் மஹத், அஹங்காரம் முதலியத் தத்துவங்கள் பரிணமித்து வருவது பராதீன விஸேஷாவாப்தி. இறைவனின் அவதாரங்கள், தோற்றங்கள் முதலியவை ஆவிர்பாவங்கள் அல்லது ப்ராதுர் பாவங்கள். இது ஒருவகையான ஸ்ருஷ்டி. ப்ராதுர் பாவோ ஹரேர் ஜனி என்பது ஸாஸ்த்ரம். ஆகையால் நாராயண ரூபத்திலிருந்து

வாஸுதேவாதி நான்கு ரூபங்கள் தோன்றுவது ஆவிர் பாவம் அல்லது ப்ராதுர்பாவம் வகையைச் சேர்ந்த ஸ்ருஷ்டியாகும். இதுவே ஈஶஸ்ருஷ்டி அல்லது ஸுத்தஸ்ருஷ்டியாகவும். இதிலே ப்ரக்ருதி ஸம்பந்தம் துளிக்கூட இல்லை. அப்பொழுது லக்ஷ்மீ தேவியும் நான்கு ரூபங்களை எடுத்துக் கொண்டு கடவுளை ஸேவிக்கிறாள்.

லக்ஷ்மீரூபம் - பரமாத்மாரூபம் - கார்யம்

மாயா - வாஸுதேவ - முக்திப்ரதான (வீடுப்பேறு அளித்தல்)

ஜயா - ஸங்கர்ஷண - ஸம்ஹாரம் (அழித்தல்)

க்ருதி - ப்ரத்யும்ன - படைத்தல் (ஸ்ருஷ்டி)

ஶாந்தி - அநிருத்த காத்தல் (பாலன)

லக்ஷ்மீ - நாராயண - மூலரூபஹரி - ஸர்வ கார்யம்.

29. **பிம்போபாஸனா** = பகவான் பிம்பன் ; நாம் - ஜீவர்கள் ப்ரதிபிம்பர்கள். ஜீவர்கள் ஸ்வரூபமே உபாதிகளாகும். உபாதிகள் பேதத்தால் பிரதி பிம்பங்கள் - பேதங்கள் - உள்ளன. ஜீவோபாதிக்கும் ஜீவஸ்வரூபத்துக்கும் பேதமே இல்லை. இருந்தாலும், விஶேஷ மூலம் பேதத்தை உணரலாம். ஒவ்வொரு ஜீவனுக்கும் ப்ரதியேக பிம்பரூபம் உண்டு. அந்தப் பிம்ப ரூப ஹரியை உபாஸிப்பதே பிம்போபாஸனை ஆகும். பிரதி பிம்பங்களுக்கு ஏற்ப பிம்பங்கள் வேறுப்பட்ட வைகளாக இருந்தாலும், ஸ்வரூபேன எல்லாம் பிம்பங்களும் ஒன்றே.

30) **24 தத்வங்கள்** = ஆகாஶம், வாயு, அக்னி, ஜலம், ப்ருதிவி என்கிற பஞ்சமஹா பூதங்கள். சப்தம், ஸ்பர்ஸம், ரூபம், ரஸம், கந்தம் - என்கிற பஞ்ச தன் மாத்திரைகள். வாக், பாணி, பாத, பாயு, உபஸ்த - என்கிற பஞ்ச கர்ம இந்த்ரியங்கள். சக்ஷு, ஸ்ரோத்ர, த்வக், ரஸன, க்ராண என்கிற பஞ்ச ஞான இந்த்ரியங்கள். மனஸ், அஹங்காரம், மஹத் மற்றும் அவ்யக்தம் என்கிற 4 தத்துவங்கள் (மொத்தம் 24 தத்வங்கள்).

*31)* **தத்வாபிமானி தேவதைகள்** = தத்வங்கள் எல்லாம் ஜடமயமானவை ஸ்வத: ப்ரவ்ருத்தி ஸக்தி அவைகளுக்கு இல்லே. ஆகையால் ஒவ்வொரு தத்துவத்துக்கும் ஒரு அபிமானி தேவதையை பரமாத்மா ஏற்படுத்தியுள்ளார். அபிமானி தேவதைகள் மூலமாகத்தான் தத்வ ப்ரவ்ருத்தி நடக்கின்றன. அந்த அபிமானி தேவதை களையும் ஸ்ரீ ஹரியே வாயுபகவான் மூலம் தூண்டுகிறார். இப்பொழுது இந்த 24 தத்துவங்களின் அபிமானி தேவதைகளைக் காண்போம்.

| தத்வம் | = | அபிமானி தேவதை |
|---|---|---|
| 1) பூதாகாஶம் (ஆகாயம்) (வெளி) | = | கணபதி |
| 2) வாயு (காற்று) (வளி) | = | ப்ரவாஹ வாயு |
| 3) தேஜஸ் (அ) அக்னி (நெருப்பு) (அனல்) | = | அக்னிபகவான் |
| 4) ஜலம் (நீர்) (புனல்) | = | வருணன் |
| 5) ப்ருத்வி (அ) பூமி (நிலம்) (மண்) | = | தராதேவி (அ) பூமித்தாய் |
| 6) ஸப்தம் (ஒலி)<br>7) ஸ்பர்ஸம் (தொடல்)<br>8) ரூபம் (உருவம்)<br>9) ரஸம் (ருசி)<br>10) கந்தம் (மணம்) | = | ஸௌபர்ணீ (கருடபத்னீ)<br>வாருணீ (ஸேஷபத்னீ)<br>உமா (ருத்ரபதனீ) |

ஸௌபர்ணீ, வாருணீ இரண்டிரண்டு தத்வங்களுக்கும், உமா ஒரு தத்துவத்துக்கும் நியாமகர்களாகி உள்ளனர்.

| | | |
|---|---|---|
| 11) வாக் (வாக்கு) | = | அக்னி |
| 12) பாணி (கை) | = | இந்த்ரன் |
| 13) பாத (கால்) | = | ஜயந்தன் (இந்த்ரனின் மகன்) |
| 14) பாயு (குதம்) (மலத்துவாரம்) | = | யமன் |

| | | | |
|---|---|---|---|
| 15) | உபஸ்தம் (ஆண் லிங்கம் மற்றும் பெண் யோனி) (ஜனன இந்தரியம்) | = | தக்ஷன் |
| 16) | சக்ஷு | = | சூர்யன் |
| 17) | ஸ்தோத்ரம் (காது) | = | சந்த்ரன் |
| 18) | த்வக் (தோல்) | = | குபேரன் |
| 19) | ரஸனம் (நாக்கு) | = | வருணன் |
| 20) | க்ராணம் (மூக்கு) | = | அஸ்வினீ தேவதைகள் |
| 21) | மனஸ் | = | கருட, ஸேஷ |
| 22) | அஹங்காரம் | = | ருத்ர தேவதைகள் |
| 23) | மஹத்தத்துவம் | = | ப்ரஹ்மதேவர் |
| 24) | அவ்யக்தம் அல்லது மூலப்ரக்ருதி தத்வம் | = | மஹாலக்ஷ்மீ |

சிறுக்குறிப்பு; சிலர் ப்ரக்ருதியை 25வது தத்துவமாகவும், மஹத்தத்துவத்தின் ஒரு பிரிவாகிய புத்தித் தத்துவத்தை 24 வது தத்துவமாகவும் கூறுவர். இதுவும் சரியே. மஹத் தத்துவத்தின் ப்ரபேதமாகிய புத்தித் தத்தவத்தின் அபிமானி தேவதை - ஸரஸ்வதி தேவியாவள்.

அஹங்காரத் தத்துவத்திலும், வைகாரிக, தாமஸ, தைஜஸ என்கிறப் ப்ரபேதங்கள் உண்டு.

பர்மாத்மா இச்சையினால் மூலப்ரக்ருதியில் (ஸத்வ - ரஜஸ் தமோமய குணங்களுடன் கூடியது) சலனம் ஏற்பட்டு முதலில் மஹத் தத்வம், பின்பு புத்தித் தத்வம், உண்டாகிறது. பின்பு மஹத் தத்துவத்திலிருந்து, வைகாரிக, தாமஸ, தைஸஜ அஹங்காரங்கள் உண்டாகின்றன. வைகாரிகத்திலிருந்து மனஸ் தோன்றுகிறது. தைஸஜத்திலிருந்து பஞ்சகர்ம இந்த்ரியங்கள்,

பஞ்ச ஞான இந்திரியங்கள் தோன்றுகின்றன. தாமஸத்திலிருந்து பஞ்ச தன்மாத்ரைகள், பஞ்ச பூதங்கள் தோன்றுகின்றன. இவ்வாறு தத்துவ ஸ்ருஷ்டிகள் நடக்கின்றன. இவைகளிலும், சூக்ஷ்ம ஸ்ருஷ்டி மற்றும் ஸ்தூல ஸ்ருஷ்டி என்பவை உள்ளன.

*32)* **விரஜாநதி** = வைகுண்ட நகரத்தை, ஸ்ரீதேவி, விரஜாநதி ரூபத்தில் சுற்றிக் கொண்டு ப்ரவஹித்துக் கொண்டு இருக்கிறாள். ப்ரளய காலத்தில் முக்தியோக்ய - ஜீவர்கள் விரஜாநதி ஸ்நானம் மூலம் தங்கள் லிங்கதேகத்தை இழக்கின்றனர்.

*33)* **லிங்க தேஹம்** = ஜீவன் ஸ்வத: அப்ராக்ருதன். ஆனால் அனாதி காலமாய் அவனைச் சுற்றி லிங்கதேகம் இருப்பதால், ஜீவனுக்கு தன் ஸ்வப்ரகாஸ ஸ்வரூபதேகம் புலப்படு வதில்லை. பின்பு ஸாதனை மூலம், அபரோக்ஷம் ஜ்ஞானம் அடைந்து பின்பு விரஜா ஸ்நானம் மூலம், ஜீவன் லிங்கதேகத்தை விடுகிறான். பின்பு தன் ஸ்வரூப அப்ராக்ருத தேகத்துடன் முக்தி ஸ்தானத்தில் ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டு இருக்கிறான். லிங்கதேஹம் - 16 சூக்ஷ்ம்ம ப்ராக்ருத கலைகளுடன் கூடியது. அவைகள் (16) பஞ்ச தன் மாத்ரைகள், பஞ்ச கர்மேந்த்ரியங்கள், பஞ்ச ஞான இந்த்ரியங்கள், மற்றும் மனஸ் ஆகும். லிங்கதேகம் த்ரி குணாத்மகமானது. லிங்கம் பந்தக ஸக்தியுள்ளது. லிங்கபங்கமே ஸாதனையின் முக்கியக் குறியாகும்.

*34)* **வடபத்ரம்** = ஆல இலை. ப்ரளய காலத்தில், ஸகல சேதனா சேதன மயமான ப்ரபஞ்சம் பகவத் உதரத்தில் உள்ளது. அப்பொழுது உள்ள ப்ரளய ஜலம் அப்ராக்ருதமானது. ஸாக்ஷாத் லக்ஷ்மீ தேவியே ப்ரளய ஜலமாக மாறி விடுகிறாள். அப்பொழுது லக்ஷ்மியே வடபத்ரரூபத்தில் (ஆல இலை உருவத்தில்) பரமாத்மாவை பாலக்ருஷ்ண ரூபத்தில் தாங்குகிறாள். பரமாத்மா அப்பொழுது வடபத்ர ஸாயி யாகிறான்.

*35)* **சூன்யாபித ஹரி** = ஶம் ஊனம் குருதே விஷ்ணு : அத்ருஸ்ய: ஸன் பர: ஸ்வயம் ! தஸ்மாத் சூன்ய இதிப்ரோக்த: !! ஸுக பூர்ணநாகிய ஹரி, அவ்யக்தனாக இருந்துக் கொண்டே (கண்ணுக்குப் புலப்படாமலே,) மற்ற எல்லாரின் ஸுகங்களை மிகவும் குறைச்சலாகச் செய்துக் கொண்டு இருப்பதால், அந்த ஹரிக்கு சூன்யன் என்கிறப் பெயர் வந்தது. ரமா ப்ரஹ்மாதி எல்லோரின் ஸுகங்களும் ஹரியின் ஸுகத்தை விட அனந்த மடங்கு குறைவானது. அவ்வாறு மிகவும் குறைவாக இருக்க வேண்டும் என்பதும் ஹரியின் ஸங்கல்பத்தினால் தான். ஆகையால் ஹரி சூன்ய நாமகன் தான்.

*36.* **ஷட்வித காயத்ரீ** = காயத்ரீ மந்த்ர ப்ரதிபாத்யன், காயத்ரீ நாமக ஸ்த்ரீரூபி ஹரிதான். சாந்தோக்ய உபநிஷத்தில் காயத்ரீயின் ஆறு பிரிவுகளை ப்ரபேதங்களை விளக்கப்பட்டுள்ளன. ஷட்வித காயத்ரீ இவ்வாறு உள்ளன.

1) காயத்ரீ மந்த்ரப்ரதிபாதய விஷ்ணு ஸ்த்ரீரூபன் - சூர்யனைப் போன்று பிரகாஸம் உள்ளவன்.

2) மத்ஸ்ய முதலிய அவதார ரூபங்களில் உள்ளவன்; பூத நாமக காயத்ரீ ப்ரதி பாத்யன். பூத என்றால் பரி பூர்ண என்று அர்த்தம்.

3) வாக் இந்த்ரியத்திலுள்ள வாக் நாமக ஸ்த்ரீரூப ஹயக்ரீவன்.

4) ப்ருதிவியில் உள்ள மஞ்சள் வண்ண ப்ருதிவி நாமக ஹரிரூபன்.

5) ஜீவன் உள்ளே உள்ள, ஜீவனை வியாபித்து இருக்கும் ஸரீரநாமக ரூபன்.

6) ஜீவன் ஹ்ருதயத்தில் உள்ள ஹ்ருதய நாமக ரூபன். இந்த ரூபங்களைந் பிரதிபாதிக்கும் காயத்ரீ நான்கு பாதங்கள் உள்ளது.

37) **காயத்ரீ மந்த்ரம்** = காயத்ரீ மந்த்ரம் 2 விதமானது. ஸந்த்யாவந்தனத்தில் வருவது விஸ்வாமித்ர காயத்ரீ. அது வ்யாஹ்ருதியுடன் கூடியது.

**ஓம் பூர்புவ ஸ்வ: ஓம் தத்ஸவிதுர்வரேண்யம் । பர்கோ தேவஸ்ய தீமஹி । தியோ யோந: ப்ரசோதயாத் ॥**

அஷ்ட மஹாமந்த்ரங்களில் ஒன்றாக வரும் காயத்ரீ, ப்ரஹ்ம காயத்ரீயாகும். அது வ்யாஹ்ருதியற்றது.

**ஓம் । ஓம் தத்ஸவிதுர் வரேண்யம் । பர்கோ தேவஸ்ய தீமஹி । தியோ யோந: ப்ரசோதயாத் ॥**

இதை சதுஷ்பாத காயத்ரீ என்றும் கூறுவர். காயத்ரீ நாமக விஷ்ணுவை சதுஷ்பாத் என்று அழைப்பர்.

38) **அஷ்டப்ரக்ருதி** = பூமி, ஜலம், நெருப்பு, காற்று, ஆகாஸம், மனஸ், புத்தி, அஹம்காரம் - இவைகள் ப்ரக்ருதி அஷ்டகங்கள் என்று பகவத் கீதையில் கூறப்பட்டுள்ளன. இந்த எட்டுக்கும் லக்ஷ்மீயே அபிமானி தேவதை: எட்டு ரூபங்களில் உள்ளாள்.

39) **ப்ரணவம்** = அ-உ-ம-நாத - பிந்து - கோஷ - ஶாந்த-அதிஶாந்த என்ற எட்டுப் பிரிவுகளைக் கொண்டது ப்ரணவம். அவைகளில் பரமாத்மா விஸ்வ, தைஜஸ, ப்ராஜ்ஞ, துரீய, ஆத்மா, அந்தராத்மா, பரமாத்மா, ஜ்ஞானாத்மா என்கிற எட்டு ரூபங்களில் உள்ளார். பரமாத்மா ப்ரணவ ஸ்வரூபர். ப்ரணவ ப்ரதிபாத்யர் மற்றும் ப்ரஹ்மாதிகளுக்குப் ப்ரணவத்தை உபதேசிப்பவர்.

40) **நவ வித பக்தி** = ஸ்ரவணம் (ஹரி கதையைக் கேட்டல்) கீர்தனம் (ஹரி நாமத்தைப் பாடுதல்) ஸ்மரணம் (ஹரியை நினைத்தல்) பாதஸேவனம் (ஹரியின் திருவடி தொழுதல்)

அர்ச்சனம் (ஹரியை பூஜித்தல்) வந்தனம் (ஹரியை வணங்குதல்) தாஸ்யம் (ஹரியின் தொண்டானாகிருத்தல்) ஸக்யம் (ஹரியின் தோழனாகிருத்தல்) ஆத்மநிவேதனம் (ஹரியிடம் தன்னையே முழுமையாக அர்ப்பணித்தல்).

41) **நவவித த்வேஷம்**= ஜீவாபேதம் (ஜீவனும், ஹரியும் ஒன்று என்றுத் தெரிதல். அதாவது ஜீவ - ஈஸஐக்யம்) நிர்குணத்வம் (ஹரியிடம் எவ்விதக் குணங்களும் இல்லையென்று நினைத்தல்) அபூர்ணகுணதா (ஹரியிடம் உள்ள குணங்கள் ஸம்பூர்ண மற்றவை என்று நினைத்தல்) ஸாம்யாதிக்யம். (ஹரிக்கு ஸமமாக ஸக்தியுள்ளவர்கள், ரமா, ப்ரஹ்மா, ருத்ரன் முதலியவர்கள் என்று நினைத்தல்) ததன்யேஷாம் பேதஸ்தத்கதம்: (ப்ரம்மாதிகளில் யாராவது ஒருவர் ஹரிக்கு ஸமரானவர் என்று நினைத்தல்) ப்ராதுர் பாவ விபர்யாஸ: (ஹரியின் மூல ரூபங்களுக்கும், அவதார ரூபங்களுக்கும் மற்றும் ஹரியின் அங்கங்களுக்கும், குணங்களுக்கும் க்ரியைகளுக்கும் ஹரிக்கும் பரஸ்பரம் பேதமிருக்கிறது என்று நினைத்தல்) (மற்றும் ஹரி ப்ராக் ருத ரூபமுள்ளவன் என்று நினைத்தல்) தத்பக்த துவேஷம்: (ஹரியின் பக்தர்களை நிந்தித்தல்) தத்ப்ரமாணஸ்யநிந்தா: (வேதங்கள் முதலிய பிரமாணங்களை நிந்தித்தல்) இந்த ஒன்பது துவேஷங்களையும் நாம் கைவிட வேண்டும். அந்த ஒன்பது பக்திகளைக் கைப்பற்ற வேண்டும்.

42. **தாத்விக அஸுரர்கள்** = தத்வாபிமானி தேவதைகளைப் பற்றி முன்பேக் குறிப்பிடப்பட்டுள்ளது. அவர்கள் நற்செயல்களைக் செய்பவர்கள். நம் தேகத்தில் தத்வாபிமானி தேவதைகள் இருந்துக் கொண்டு, வாயு தேவரால் பிரேரிக்கப்பட்டு நற்செயல்களைப் புரிகின்றனர். அவ்வாறே, நாம் செய்யும் தீயச்செயல்களை, தத்வாபிமானி தைத்யர்கள் வாயு தேவரால் பிரேரிக்கப்பட்டுச் செய்கின்றனர். மதுகைடப, காலநேமி, விப்ரசித்தி, அலக்ஷ்மீ (கலிபத்னீ), கலி - இவர்கள் தத்வாபி

மானிதைத்யர்கள். கலிதான் எல்லாரையும் விட மிகவும் தாழ்ந்தவன். (ஜீவா தமன்.) அவனுக்குக் கீழ் வேறு எந்தத் தாழ்ந்த ஜீவனும் இல்லே. வாயுதேவர் எப்படி ஜீவோத்தமரோ, குணபூர்ணரோ, தோஷ ரஹிதரோ, விஷ்ணுபக்தரோ, அப்படி கலி எதிர் மறையானவன். அதாவது, ஜீவாதமன், குண ரஹிதன், தோஷபூர்ணன், விஷ்ணு த்வேஷி ஸ்ரேஷ்டன், அஜ்ஞானம், ப்ரமை இவைகளுக்குக் கலி அபிமானி. துஷ்ட காமாதிகளுக்கு காலநேமி அபிமானி. இதேபோல மற்றத் தீயச் செயல்களுக்கு மற்ற அநேக அஸுரர்கள் அபிமானிகள்; நியாமகர்கள். முக்யப்ராணரே, கலி முதலியவர்களிடம் இருந்துப் பிரேரித்து. துஷ்கர்மாக்களைச் செய்விக்கிறார். அதனால் அவர்களுக்கு தமப்ராப்திக்கு வேண்டிய ஸாதனைக் கிடைக்கின்றன. ஆனாலும் முக்யப்ராணருக்கு பாப லேபனம் கிஞ்சித்துக் கூடக் கிடையாது. பக்தர்களின் மனதில் தோன்றும் பாபக் கர்மங்களை நாஶம் செய்து, அவர்களை ரக்ஷிப்பதால், வாயுவுக்கு ப்ரபஞ்ஜன என்கிற நாமதேயம் உண்டு.

43) **கர்த்தா - காரயிதா** = ஸ்ரீ ஹரிதான் முக்ய எல்லா கர்மங்களையும் செய்யும் கர்த்தாவாவர். மற்றும் ஸகல ஜீவர்கள் மூலம் கர்மங்களைச் செய்விப்பவர் (காரயிதா) இவ்வாறே ஹரியே போக்தா (சாப்பிடுபவர்) போஜயிதா (சாப்பிடச் செய்பவர்) முதலியன.

44) **கர்மத்ரயம்** = நித்யம், நைமித்திகம், காம்யம், என்று கர்மங்கள் மூவ்வகைப்படும். நித்யமும், கட்டாயம் செய்யப்படவேண்டிய கர்மங்கள் நித்யகர்மங்கள். (ஸந்த்யாவந்தனம், தேவபூஜா முதலியன) இவைகளைச் செய்வதால் புண்யம் வருவதில்லே. ஆனால் செய்யாமல் இருந்தால் பாபம் ஸம்பவித்து, நரகாதி துக்கங்கள் கிடைக்கும். சில கால விஸேஷங்களில் மாத்திரம் செய்யப்படும் கர்மம் நைமித்திகம் ஆகும். (க்ரஹண காலத்தில் செய்யும் தர்ப்பணம், ஸ்ரார்த்தம் போன்றவை.)

சில பலன்களைக் கோரிச் செய்யும் கர்மங்கள் காம்ய கர்மங்கள் ஆகும். (புத்ரகாமேஷ்டி யாகம், கர்ரீரியாகம் போன்றவை.)

45) **கர்மஸமர்ப்பணம்** = நாஹம் கர்தா ஹரி கர்தா ! தத்பூஜா கர்மசாகிலம் ! தததாபி மத்க்ருதா பூஜா ! தத்ப்ரஸாதேன நான்யதா !! என்றபடி, நாம் செய்யும் எல்லா கார்யங்களும், ஹரியின் பிரேரனைப்படி, வாயுதேவர், தத்வாபிமானி தேவதைகள், தத்வாமிமானி தைத்யர்கள் மூலம் செய்விக்கிறார். நான் ஸ்வதந்த்ர கர்த்தன் இல்லை. நான் ஒரு கருவி மாத்ரமே. எல்லாம் இறைவனேச் செய்கிறார். ஆகையால் எல்லா கர்மங்களையும் அவனுக்கே அர்ப்பணிக்கிறேன் என்கிற பாவனையேத்தான் ஸர்வகர்ம ஸமர்ப்பணமாகும்.

(இத்துடன் சிறப்புக் குறிப்புகள் முடிந்தன. இன்னும் அநேக ப்ரமேய விஷயங்கள் உள்ளன. அவைகளை இங்கேக் கொடுக்க முடியாதக் காரணம் என்னவென்றால், அவைகள் மிகவும் சூக்ஷ்மமாகவும் க்லிஷ்டமாகவும் உள்ளதாலும், அவைகளை விவரிக்க இடம் இல்லாததாலும் தான்.) (அவைகளைப் பெரியவர்களின் உதவியுடன் தெரிந்துக்கொள்ளவும்).

ஸ்ரீ முக்யப்ராணாந்தர்கத ஸ்ரீ க்ருஷ்ணார்பணமஸ்து

# ஸ்ரீராகவேந்த்ர க்ருத க்ரந்த மாலிகா ஸ்தோத்ரம்

---

மந்த்ராலய மஹான் ஸ்ரீ ஸ்ரீ ராகவேந்த்ர யதிவர்யர் அவர்கள் அனேக க்ரந்தங்களை (நூல்களை) எழுதி நம்முடைய மத்வ மதத்திற்கு மகத்தான ஸேவைச் செய்துள்ளார். அவர் எழுதிய நூல்களின் பெயர்களை ஒருதரம் தினந்தோறும் நினைத்தாலே, அவரின் நூல்களை முழுமையாகப் படித்தப் பயனைப் பெற முடியும் என்று ஆன்றோர்கள் கூறுவார்கள்.

அந்நூல்களின் பெயர்களை நினைவில் வைத்திருப்பதற்காக, இந்த ஸ்ரீ ராகவேந்த்ர க்ருத க்ரந்த மாலிகா ஸ்தோத்ரம், என்கிற நூல் இயற்றப்பட்டுள்ளது. இதை தினந்தோறும் பாராயணம் செய்தால் ஸ்ரீராயரின் அருளைச் சுலபமாகப் பெற முடியும். இந்த நூலுக்கு ஸ்ரீராகவேந்த்ரா யதிவர்ய க்ருத க்ரந்த ப்ரஸுன நாம ஸங்க்ரஹ மாலிகா என்ற மற்றொரு பெயரும் உண்டு. இதை இயற்றியவர் ஸ்ரீமந்த்ராலயம் ஸ்ரீராயரின் ப்ருந்தாவனத்தை நாள்தோறும் பூஜைச் செய்து வரும் வித்வான் ஸிரோமணி, த்வைத பூஷணம் அர்ச்சகர் ஸ்ரீ ராகவேந்த்ராசார்யர் ஆவர். இப்பொழுது முதலில் ஸ்தோத்திரத்தை முழுமையாகக் கொடுத்து விட்டு பின்பு அதனின் ஸாராம்சத்தையும் தருகிறேன்.

1. ஸ்ரீ நிவாஸம் ப்ரணம்ய ஸ்ரீ பூர்ணேக்ஷாதி குரூனபி ।
வக்ஷ்யே ஸ்ரீ ராகவேந்த்ரார்ய க்ருத க்ரந்தாஸ்து தன் முதே ॥

2. ஸ்ரீமத் ஸுதா பரிமளம் சக்ரே கீதார்த மஞ்ஜரீம் ।
ஸத்பாவ தீபிகாம் சக்ரே ப்ராத: ஸங்கல்ப கத்யகம் ॥

3. ஸாயமர்பண கத்யம் ச ததா கீதார்த ஸங்க்ரஹம் ।
பாவ தீபம் ச ஸத்தத்வ ப்ரகாஸார்த ப்ரகாஸகம் ॥

4. குருர் தஸ ப்ரகரண டிப்பணீ: ஸ்ரீ ஹரே ப்ரியா: ।
தஸகஸ்யோபனிஷதாம் கண்டார்தான் ஸர்வஸம்மதான் ॥

5. ந்யாய முக்தாவளீம் தேனே
ததா மந்த்ரார்த ஸங்க்ரஹம் ।
ஸுத்ரார்த போதினீம் தேவஸ்வபாவஸ் தந்த்ர தீபிகாம் ॥

6. வ்யாக்யாம் ஸதணுபாஷ்யஸ்ய முக்திதா
தத்வ மஞ்ஜரீம் ।
கீதாதாத்பர்ய டீகாயா விவ்ருதிம் புதமோததாம் ॥

7. அதர்வணே ஸாவாஸ்யோ பதோர் விவ்ருதீ குரு: ।
தாத்பர்ய சந்த்ரிகா திவ்ய டிப்பணீம் க்ருத தோஷதாம் ॥

8. ப்ரமாண பத்ததேச் சக்ரே வாதா வள்யாச்ச டிப்பணீம் ।
ஸத்தர்க தாண்டவஸ்யாபி டிப்பணீம் ஸ்ரீகுருர் முதா ॥

9. வ்யாக்யாம் புருஷ ஸூக்தஸ்ய
சக்ரே மந்த்ராயிய ப்ரபு: ।
அம்ப்ரணீ ஸூக்தவிவ்ருதிம் பார்கவி தோஷ வர்தினீம் ॥

10. ப்ரமேய நவமாலாயா வ்யாக்யானம் பூஸூர த்ரும: ।
ஹிரண்யகர்ப ஸூக்தஸ்ய வ்யாக்யானம்
ஸ்ரஷ்ட்ரு துஷ்டயே ॥

11. வேத த்ரயாணாம் விவ்ருதீம்
மானினாம் மானஸாஸினீம் ।
பாட்ட ஸங்க்ரஹ மீமாம்ஸாம்
ததா ஸ்ரீபாவ ஸங்க்ரஹம் ॥

12. ஸ்ரீராம க்ருஷ்ண சரித மஞ்ஜர்யௌ ஸர்வ மோததே ।
ப்ரமேய தீபிகா வ்யாக்யாம் வித்வச்சேத: ப்ரமோததாம் ॥

13. அபகாதார தம்யாக்யாம் ஸ்துதிம் அப்யதனோத்குரு : ।
ஏகோன பஞ்சாஸத் க்ரந்தான்
தேனே போதாயஸன் ந்ருணும் ॥

14. ஏதேஷாம் நாமபடனுத் துஷ்யேன் மத்வச்ச மத்குரு: ।
வேதவ்யாஸார்ய தனுஜ ராகவேந்த்ரேண நிர்மிதா ॥
ருதிரோத்காரி வைஸாக தஸம்யாம் மந்த்ர மந்திரே ।

அனேன ஸ்ரீ குருராஜக்ருத க்ரந்த ரத்ன மாலிகா ஸ்தோத்ர படனேன பகவான் ஸ்ரீமத் ராகவேந்த்ரதீத குர்வந்தர்கத பாரதீரமண முக்யப்ராணந்தர்னகத ஸீதாபதி ஸ்ரீ ராமசந்த்ராபின்ன மாஸநியாமகாத்மக ஸ்ரீ ருக்மிணீஸ: ஸுப்ரீதோ பவது ॥

॥ ஸ்ரீ க்ருஷ்ணார்பணமஸ்து ॥

**ஸாராம்ஸம் :**

ஸ்ரீராயர் கீழ்கண்ட 51 நூல்களை இயற்றியுள்ளார்கள்.

1. ஸ்ரீமத் ஸுதா பரிமள-இதன் மூலமாக தான் ஸ்ரீராயருக்கு பரிமளாச்சாரியார் என்கிற பட்டப்பெயர் வந்தது ஆச்சாரியார் ஸ்ரீமத்வர் ப்ரஹ்ம ஸுதரங்களுக்கு அனுவயாக்யானம் என்கிற சிறந்த உரை நூலை (பாஷ்யம்) இயற்றியுள்ளார். அதற்கு ஸ்ரீஜய தீர்த்தர் ஸ்ரீமந் நியாய ஸுதா என்கிற விளக்கவுரையை (டீகா) எழுதியுள்ளார். அந்த ஸுதாவுக்குத் தான் ஸ்ரீராயர் பரிமள என்கிற தெளிவுரையை (டிப்பணி) எழுதியுள்ளார்.
2. கீதா பாஷ்ய ப்ரமேய தீபிகாவ்யாக்யா-ஸ்ரீமத் பகவத் கீதைக்கு விளக்கவுரை.
3. பாவதீபிகா.
4. ப்ரகாஸ-ஸ்ரீமத்வர் ப்ரஹ்ம ஸுத்ரங்களுக்கு ''பிரம்ம ஸுத்ர பாஷ்யம்'' என்கிற நூலை முதலில் இயற்றினார். அதற்கு வ்யாஸராயர் சந்த்ரிகா என்ற வ்யாக்யானத்தை எழுதினார், அதற்கு விளக்கவுரையாக (டிப்பணி) ஸ்ரீராயர் ப்ரகாஸ என்கிற க்ரந்தத்தை எழுதியுள்ளார்.
5. ஸ்ரீ மத்வர் த்வைத மதக் கொள்கைகளை எல்லோரும் புரிந்துக் கொள்ளும்படியாக 10 ப்ரகரண க்ரந்தங்களை எழுதியுள்ளார் அவைகளுக்கு ஸ்ரீராயர் டிப்பணிகளை எழுதியுள்ளார்கள். அவைகளின் பெயர்கள் பின்வருமாறு:

5. தத்வ ஸங்க்யான டிப்பணி
6. தத்வ விவேக டிப்பணி
7. ப்ரமாண லக்ஷண டிப்பணி
8. மாயாவாத கண்டன டிப்பணி
9. உபாதி கண்டன டிப்பணி
10. ப்ரபஞ்ச மித்யாத்வானுமான கண்டன டிப்பணி
11. தத்வோத்யோத டிப்பணி
12. கதாலக்ஷண டிப்பணி
13. விஷ்ணு தத்வ விநிர்ணய டிப்பணி

14. கர்ம நிர்ணய டிப்பணி
15. ஸ்ரீமத்வாச்சார்யார் பத்து உபநிடதங்களுக்கு பாஷ்யங்கள் எழுதியுள்ளார்கள் அவைகளை புரிந்து கொள்வதற்கு ஸ்ரீராயர் அந்த பத்து உபநிடதங்களுக்கு கண்டார்த என்கிற விளக்கவுரைகளை எழுதியுள்ளார்கள். அவைகளின் பெயர் பின்வருமாறு:
15. ஈஸாவாஸ்ய உபநிஷத் கண்டார்த
16. கேன (தலவாகார) உபநிஷத் கண்டார்த
17. காடக (கவட) உபநிஷத் கண்டார்த
18. தைத்தரீய உபநிஷத் கண்டார்த
19. சாந்தோக்ய உபநிஷத் கண்டார்த
20. ப்ருஹதாரண்யக உபநிஷத் கண்டார்த
21. ஷட்ப்ரச்னோபநிஷத் கண்டார்த
22. மாண்டூக்ய உபநிஷத் கண்டார்த
23. முண்டக (அதர்வன) உபநிஷத் கண்டார்த
24. ஐதரேய உபநிஷத் கண்டார்த
25. ப்ராத: ஸங்கல்ப கத்யம்
26. ஸர்வ ஸம்ர்பண கத்யம்
27. பாவதீப ப்ரஹ்ம ஸூத்ரபாஷ்ய தத்வப்ரகாஶ டீகா டிப்பணி இது.
28. ந்யாய முக்தாவளி-ஸூத்ர பாஷ்ய டிப்பணி
29. மந்த்ரார்த ஸங்க்ரஹ
30. தந்த்ர தீபிகா ஸூத்ர பாஷ்ய டிப்பணி
31. தத்வ மஞ்ஜரீ-இது ஆசார்யரின் ஸ்ரீ மதனுபாஷ்ய விளக்க உரையாகும்.
32. ஸ்ரீமத் பகவத் கீதா விவ்ருதி. இது ஸ்ரீ பகவத் கீதைக்கு ஒரு சிறந்த விளக்கவுரை நூல்.
33. அதர்வண, ஈஸாவாஸ்ய உபதிஷத் விவ்ருதி
34. ப்ரமாண ஸங்க்ரஹ
35. ப்ரமாண பத்ததி டிப்பணி
36. வாதாவளீ டிப்பணி-இவைகள் ஸ்ரீ டீகாராயரின் இரு ஸ்வதந்த்ரா நூல்களுக்கு ஸ்ரீராயரின் விளக்கவுரைகளாகும்.

37. தர்க தாண்டவ டிப்பணி ஶ்ரீ வ்யாஸராயரின் தர்க தாண்டவ நூலின் வ்யாக்யானம்.

38. புருஷ ஸூக்த வ்யாக்யா

39. அம்ப்ரணீ ஸூக்த விவ்ருதி

40. ஹிரண்ய கர்ப ஸூக்த வ்யாக்யா

41. ப்ரமேய நவமாலிகா வ்யாக்யா ஶ்ரீ நாராயண பண்டித ஆசாரியாரின் ஶ்ரீமத் அணுமத்வ விஜய என்கிற நூலின் விளக்கவுரை இது.

42. ரிக்வேத விவ்ருதி

43. யஜுர்வேத விவ்ருதி

44. ஸாமவேத விவ்ருதி

45. பாட்ட ஸங்க்ரஹம்

46. ஶ்ரீபாவ ஸங்க்ரஹம்-ஶ்ரீ மஹாபாரத தாத்பர்ய நிர்ணயத்தின் சுருக்கவுரை.

47. ஶ்ரீராமசரித்ர மஞ்ஜரீ-ஶ்ரீ ராமாயண இதிஹாஸத்தின் சுருக்கவுரை.

48. ஶ்ரீக்ருஷ்ண சாரித்ர மஞ்ஜரீ-ஶ்ரீ பாகவத தஸமஸ் கந்த சுருக்கவுரை.

49. கீதா தாத்பர்ய டீகா விவரணம்

50. ப்ரமேய தீபிகா வ்யாக்யா

51. நதீ தாரதம்ய ஸ்தோத்ரம்-பராத தேசத்திலுள்ள பல நதிகளின் தாரதம்யங்களைப் பற்றி விளக்கியுள்ள ஒரு சிறு ஸ்தோத்ர நூல்.

இவ்வாறுக ஶ்ரீமந்த்ராலயப் பிரபு 51. நூல்களை எழுதியுள்ளார்கள். இவைகளைக் குறிப்பிடும் இந்த க்ரந்தமாலிகா ஸ்தோத்திரத்தை தினந்தோறும் பாராயணம் செய்து நாம் இஹ, பரஸுகங்களை ஶ்ரீஹரி குருகளின் அனுக்கிரஹத்திறைல் அடையலாம்.

॥ ஶ்ரீ க்ருஷ்ணார்பணமஸ்து ॥



*Copies Can be had from :-*

1. Sri N. Anand, Ph. 37 63 002
   2, Valmiki St., Gandhi Nagar,
   Saligramam,
   CHENNAI - 600 093.

   Ph. 82 80 286

2. Sri Krishna Sri Raghavendra Mutt,
   8, Raghaviaha Road, T. Nagar,
   CHENNAI - 600 017.

*Printed at :-*

Veda Vidya Printers, Srirangam, Ph. (0431) 432 181